ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 44.

ஸ்ரீ வைஷ்ணவ ஸம்பிரதாய தத்துவங்களை யுணர்த்த மாதந்தோறும் வெளிவரும் பத்ரிகை

[மதராஸ் ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் வெளியீடு]

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர்.

| ஸம் 4 | ஆகஸ்டுமீ 1952 நந்தன ஆடிமீ | 8 இதழ் |
|---|---|---|

## எம்பெருமானாரும் கீதாபாஷ்யமும்.

பகவத்கீதைக்கு நமது பாஷ்யகாரரான எம்பெருமானார் அருளிச் செய்திருக்கின்ற பாஷ்யத்தை ஆழ்ந்து நோக்கினால் அதனுடைய அருமை பெருமைகள் பேச்சுக்கு நிலமல்ல. ஸங்க்ஷேபமாக அருளிச் செய்திருந்தாலும் வியாக்கியான சைலியானது அமுதிலுமாற்ற வினிதே. இப்போது ஒரு ச்லோகத்தின் பாஷ்ய பங்க்திகள் சிலவற்றை யெடுத்துக்கொண்டு அவற்றிலுள்ள ரஸ விசேஷங்களை அநுபவிக்கவும் அநுபவிப்பிக்கவும் விரும்பி யெழுகின்றேன்.

எட்டாவது அத்யாயத்தில் பதினான்காவது ச்லோகம்—

𑌅𑌨𑌨𑍍𑌯𑌚𑍇𑌤𑌾𑌃 𑌸𑌤𑌤𑌂 𑌯𑍋 𑌮𑌾𑌂 𑌸𑍍𑌮𑌰𑌤𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌶𑌃 ।
𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌸𑍁𑌲𑌭𑌃 𑌪𑌾𑌰𑍍𑌥 ! 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃 ॥
[அநந்ய சேதாஸ் ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:,
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த! நித்யயுக்தஸ்ய யோகிந:.] என்பது.

"ஜ்ஞாநீ து ஆத்மைவ் மே மதம்" என்று பகவான் தான் தனக்கு உயிர்நிலையாகக் கொண்டாடும் ஞானியானவன் தன்னை உபாஸிக்க வேண்டியபடியையும் பேறுபெறும் பரிசையும் இனியருளிச் செய்கிறான் (கண்ணபிரான்)—என்று அவதாரிகையிட்டு சுலோகத்தை வெகு அழகாக வியாக்கியானித்தருளி யுள்ளார். இந்த சுலோகத்தின் கருத்து என்னவென்றால், அர்ஜுநா!, எவன் இடைவிடாமல் எப்போதும் வேறொன்றிலும் நெஞ்சைச் செலுத்தாதவனாய் என்னையே ஸ்மரிக்கிறானோ, என்னோடு நித்ய ஸம்ச்லேஷத்தை விரும்பியிருக்கின்ற அந்த பக்தனுக்கு நான் ஸுலபன்—என்பதேயாம். இதில் [𑌤𑌸𑍍𑌯𑌾𑌹𑌂 𑌸𑍁𑌲𑌭𑌃] 'அவனுக்கு நான் ஸுலபன்' என்கிற பகுதிக்கு பாஷ்யம் செய்தருளி யிருக்கின்ற அழகுதான் இங்கு ஸத்ஸம்ப்ரதாய ரஸிகர்களால் அநுபவிக்கத்தக்கது. முந்துற பாஷ்ய பங்க்திகளை உதாஹரித்துக் காட்டிவிட்டுப் பிறகு விவரிப்போம்.

[𑌤𑌸𑍍𑌯 𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍁𑌕𑍍𑌤𑌸𑍍𑌯—𑌨𑌿𑌤𑍍𑌯𑌯𑍋𑌗𑌂 𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌮𑌾𑌣𑌸𑍍𑌯 𑌯𑍋𑌗𑌿𑌨𑌃, 𑌅𑌹𑌂 𑌸𑍁𑌲𑌭𑌃—𑌅𑌹𑌮𑍇𑌵 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌃, 𑌨 𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌐𑌶𑍍𑌵𑌰𑍍𑌯𑌾𑌦𑌿𑌕𑌃। 𑌸𑍁𑌪𑍍𑌰𑌾𑌪𑌶𑍍𑌚. 𑌤𑌦𑍍𑌵𑌿𑌯𑍋𑌗𑌾𑌸𑌹𑌮𑌾𑌨𑌃

ஸ்வயமேவ தம் வ்ருணே। உபாஸநவிபாகம் தத்விரோதி நிரஸநம் அத்யர்த்த மத்ப்ரியத்வாதிகஞ்ச ஸ்வயமேவ ததாமீத்யர்த்த:। *யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:* இதி ஹி ச்ரூயதே। வக்ஷ்யதி ச—*தேஷாம் ஸததயுக்தாநாம்... இதி।]

இவ்வளவும் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகள். (இவற்றின் பொருளாவது—) என்னோடு எப்போதும் கூடியிருக்கவேணுமென்கிற விருப்ப முடையவனுக்கு அடையத்தகுந்தவன் நானேயாகிறேன். மிக எளிதாக அடையத் தகுந்தவனுமாகிறேன் நான். (அதாவது) அவனுடைய பிரிவைப் பொறுக்க மாட்டாதவனாய் [அவனைப் பிரிந்து தரித்திருக்க மாட்டாதவனாய்] நானே அவனை வரிக்கிறேன். என்னை யடைவதற்கான உபாஸனத்தின் பரிபக்குவ நிலைமையையும், அதற்குற்ற இடையூறுகள் நீங்குதலையும், என்னிடத்தில் அதிகமான ப்ரீதி முதலியவைகளையும் நானே கொடுக்கிறேன். *நாயமாத்மா ச்ருதியில் இவ்வர்த்தம் ப்ரஸித்தமாயிருப்பதோடு இந்த கீதையிலே மேலே பத்தாவது அத்யாயத்தில் 10, 11 ச்லோகங்களாலும் சொல்லப்படுகிறது—என்பதாம்.

ஆரியர்காள்! ஸத்ஸம்ப்ரதாய ஸாரார்த்தம் இங்கே பொதிந்திருக்குமழகை என் சொல்லுவோம்!. ஸ்வகத ஸ்வீகார மென்றும் பரகதஸ்வீகாரமென்றும் இரண்டு சொல்லுவதுண்டு; சேதநன்தான் எம்பெருமானைப் பற்றுவதானது ஸ்வகத ஸ்வீகார மென்றும்; எம்பெருமான் தானே சேதநனை வரிப்பதானது பரகத ஸ்வீகாரமென்றும் சொல்லப்படும். ஸத்ஸம்பிரதாயச் சுவடறியாத சிலர் பரகத ஸ்வீகாரமென்பதன் சுவையைச் சிறிது மறியாதே "இது ஒரு தான்தோன்றி ஸம்பிரதாயம்" என்று தூஷிப்பதுமுண்டு. ஸ்ரீவசன பூஷணத்தில்—"இவன் அவனைப் பெற நினைக்கும்போது இந்த ப்ரபத்தியும் உபாயமன்று; அவன் இவனைப்பெற நினைக்கும்போது பாதகமும் விலக்கன்று" என்று அருளிச்செய்தவிடத்தில் வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள்—

"உடைமையை உடையவன் சென்று கைக்கொள்ளுமாபோலே ஸ்வாமியான அவன் தானே வந்து அங்கீகரிக்கக் கண்டிருக்கக்கடவ பரதந்த்ரனான இச்சேதநனானவன் தான் ஸ்வாமியாய் தன் ஸ்வீகாரத்தாலே ஸ்வதந்த்ரனான அவனைப் பெற நினைக்குமளவில் அவன் நினைவு கூடாதாகில், இப்படி விலக்ஷணையாயிருக்கிற ப்ரபத்தியும் தல்லாப ஸாதனமாகாதென்றபடி......ஸ்வாமியாய் ஸ்வதந்த்ரனான அவன் ஸ்வம்மாய் பரதந்த்ரனாயிருக்கிற இவனை ஸ்வேச்சையாலே பெற நினைக்குமளவில் பாதகமும் ப்ரதிபந்தகமாக மாட்டாதென்கை. இவை யிரண்டாலும் ஸ்வகத ஸ்வீகாராநுபாயத்வமும் பரகதஸ்வீகாரோபாயத்வமும் காட்டப்பட்டது."

என்றருளிச் செய்திருக்கும் ஸ்ரீஸூக்திகள் மேலே காட்டிய கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்திகளையே அடியாகக்கொண்டவையென்று நன்கு புலப்படுகின்றது. தாம் முன்பு ஒரு வேஷத்தாலே கீதா பாஷ்யத்தில் ஸம்ஸ்க்ருதத்தாலே அருளிச் செய்ததை பின்பு மற்றொரு வேஷத்தாலே ஸ்ரீவசநபூஷண வியாக்கியானத்தில் த்ராவிடத்தாலே அருளிச் செய்தாரென்று அறுதியிடத் தட்டில்லை.

கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை ஒவ்வொன்றாக எடுத்து விமர்சிப்போம். [*தத்வியோக அஸஹமாந: ஸ்வயமேவ தம் வ்ருணே*] ஞானியான சேதநனைப் பிரிந்திருப்பதை எம்பெருமான் தான் பொறுத்திருக்கமாட்டாதவனாய் தானே அந்த சேதநனை வரிப்பதாகக் கூறுகின்றவிது தான் பரகத ஸ்வீகார மென்பது.

[[illegible]] இந்த வாக்கிய **மானது ஸ்வகத ஸ்வீகாரப்பற்றுசை நன்றாகக் கழிக்கிறது.** இந்தலையில் விளைவதெல்லாம் எம்பெருமானுடைய க்ருஷிபலமாக விளைகின்றதேயன்றி இவன் தலையாலே விளைவித்துக் கொள்ளுமது ஒன்றுமில்லை என்கிற ஸத்ஸம்பிரதாய ஸாரார்த்தம் தெளிவிக்கப்பட்டது. இந்த இடத்தில் * [illegible] ச்ருதியையும் எடுத்துக்காட்டியருளின பாஷ்யகாரர், பரகத ஸ்வீகாரத்திற்கு அதுவே பிரமாண மென்று நிரூபிக்கிற முகத்தாலே பலருடைய அசட்டு வாதங்களை அகற்றினாராயிற்று.

இவ்விடத்தில் தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமி தேசிகன் அருளிச் செய்துள்ள திவ்ய ஸூக்திகளும் தேனே பாலே கன்னலே யமுதே யத்தனை [[illegible]] என்றருளிச் செய்திருப்பது ஆழ்ந்து நோக்கத்தக்கது. "[illegible]" என்ற திருவாக்கினாலே இங்ஙனே அருளிச் செய்யவேண்டியதாயிற்று ப்ரமாண சரணாகையாலே.

## காலத்தின் போக்கு.

முற்காலத்தில் நன்மைகள் மிகுந்திருந்தனவென்றும் தற்காலத்தில் தீமைகளே மிகுகின்றனவென்றும் ஆகவே முற்காலமே மேம்பட்டதென்பது பலருடைய கொள்கையாகக் காண்கிறது. கலி முற்ற முற்றப் பாவங்களும் முற்றுகின்றன வென்கிற கொள்கை உண்மையாகவேயிருக்கட்டும்; அதைப்பற்றி நாம் இப்போது ஒன்றும் சொல்லவாவில்லை. பொதுவில் முற்காலத்தைவிட இக்காலத்திலேயே நன்மைகள் அதிகம் என்று சொல்வதற்குத் தட்டில்லையென்று தோன்றுகின்றது.

முற்காலத்தில் ஸகலவித ஸாதனங்களும் மிகவும் அருமைப்பட்டிருந்தன. தற்காலத்திலோவென்னில் அந்த வருத்தம் அறவே யொழிந்ததென்னலாம். முதலில் படிப்புக்கு வேண்டிய ஸாதனங்களை யெடுத்துக் கொள்வோம். புஸ்தகங்கள் கிடைப்பது முற்காலத்தில் மிகவும் அரிது. ஸ்ரீராமாயணம் மஹா பாரதம் ஸ்ரீ பாகவதம் போன்ற புத்தகங்கள் ஒரு ஊருக்கு ஒரு ஸ்ரீகோசம் கிடைப்பது மிக அரிதாயிருக்கும். படித்தவர்களும் முற்காலத்தில் மிகக் குறைவாகவே யிருந்தனர். அஸ்தமித்த பிறகு புஸ்தகம் பார்ப்பதற்கு எவ்வளவோ சிரமம். இவ்வகையான கஷ்டங்களெல்லாம் இக்காலத்தில் சிறிதுமில்லையென்பது அனைவர்க்கும் அநுபவஸித்தம். பாடசாலைகளும் பண்டிதர்களும் புஸ்தகஸாமக்ரிகளும் மற்றும் பல்வகையான ஸௌகரியங்களும் மலிந்திருப்பது இக்காலத்திலேயன்றி முற்காலத்தி லில்லை யென்னத் தட்டில்லை.

இப்படியே மற்று எந்த விஷயத்திலும் பார்க்கலாம். திவ்ய க்ஷேத்ர தீர்த்தங்கள் ஸேவிக்க வேணுமென்றால் அதற்காக முற்காலத்தவர்கள் பட்ட சிரமம் வாசாமகோசரம். இக்காலத்திலோ வென்னில், இன்று நினைத்தால் நாளைகாலை ஸேதுஸ்நானம். வதரியோ துவரையோ எந்த க்ஷேத்திரமும் மணிக்கணக்கில் கண்டு மீளலாம்படியான ஸௌகர்யாதிசயங்கள் பலபல.

ஆனால் இவ்வளவு ஸௌகரியங்கள் வாய்த்தும் இக்காலத்தவர்கள் இதையெல்லாம் ஸௌகரியமாகக்கொண்டு உபஜீவியாமலிருப்பதுதான் மிகவும் வருந்தத்தக்கது. முற்காலத்

தில்போல் புத்தகங்களுக்கு சிரமப்படவேண்டாதே ஸகலக்ரந்தங்களும் ஸுலபமாகக் கூடிய இக்காலத்தில் க்ரந்தங்களைக் காண்பாரும் காணவிருப்பமுடையாரும் நாளுக்குநாள் குறைந்து வருகிறார்கள். மஹர்ஷிகள் செய்த இதிஹாஸ புராணங்களையோ, மஹாகவிகளியற்றிய காவ்யநாடகாலங்கார சம்பூக்ரந்தங்களையோ ஆசாரியர்கள் அருளிச்செய்த ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதி திவ்யக்ரந்தங்களையோ கொண்டு போதுபோக்குவார் வரவரக் குறைந்துவருகிறார்கள். ந்யாயசிரோமணி வியாகரண சிரோமணி என்றிப்படி விருதுகள் பெற்று ஸம்ஸ்க்ருத சாஸ்த்ரங்களில் பரிச்ரமப்பட்டவர்களுங்கூட அவற்றால் பலனில்லையென்று கண்டு ஹிந்தீபாஷைப் பயிற்சியில் ஊன்றிவருகிறார்கள். எங்குப் பார்த்தாலும் ஹிந்தீமயமேயாய்விட்டது. ஆங்காங்கு ஸம்ஸ்க்ருத வித்யாப்யாஸத்துக்கென்று விசேஷ மூலதனஸம்பத்தியோடு ஏற்பட்டிருக்கிற பாடசாலைகளும் உரிய வித்யார்த்திகளில்லையென்கிற காரணத்தினால் உருமாறுகின்றன. இதெல்லாம் நினைக்க நினைக்கப் பரிதாபகரமே.

வைதிக ச்ரத்தாளுக்களான பலபல தனிகர்கள் ஒன்று சேர்ந்து கோடிக்கணக்கான மூலதன மேற்படுத்தி, ப்ராசீநரீதியில் வைதிகவித்யைகளையபிகரித்து வைதிகாநுஷ்டானங்கள் குன்றாதிருக்குமவர்களுக்கு சாச்வதமாக உபகரிப்பதென்று ஒரு ஏற்பாடு நடந்தாலல்லது நமது வைதிக வித்யைகளுக்கும் வைதிகாநுஷ்டானங்களுக்கும் புராதனஸ்திதி வரமாட்டாது. ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. மைஸூர் பரகாலமடாஸ்தான ஸ்வாமிகளும், ஸ்ரீமத் அஹோபிலமடாதிபதி ஸ்வாமிகளும் வைதிகவித்யாபிவிருத்திக்குப் பாடுபட்டுவருவது மிகவும் போற்றத்தக்கதாகவுள்ளது. ஸ்ரீமத் காமகோடி பீடாதிபதி. சங்கராசார்யஸ்வாமிகள் இவ்விஷயத்தில் உழைக்கு முழைப்பு வாசாமகோசரம். இப்படி ஒவ்வொரு மடாதிபதிகளும் தீக்ஷைகொண்டால் நமது வைதிக மார்க்கத்திற்கு என்ன குறை?

ஸ்ரீமத்வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய உபய வேதாந்த ப்ரவர்த்தகாசார்ய இத்யாதி பிருதாவளிகளை நாம் ஒருவிதமான ப்ரயாஸமுமில்லாமல் பெற்றிருக்கிறோம். உ. வே. என்பதற்கு இன்னது பொருளென்றுகூட, தெரிந்து கொள்ளாதவர்களுக்கும் கடிதங்களெழுதுகையில் உ. வே. என்று எழுதிவருகிறோம். கல்யாண காலங்களில் சீர்பாடல் பாடும்போது ஒன்றிரண்டு பிராயமுள்ள சிறுவர்களையுமுத்தேசித்து 'ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்ய உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யரான பெண்ணுக்கு மைத்துனன் ராகவாசாரியர்' என்று கோஷித்து வருகிறோம். இதனால் ஸ்ரீமத் வேதமார்க்க ப்ரதிஷ்டாபகத்வமும் உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்யத்வமும் நமக்கு ஜன்மஸித்தமென்று அறியக் கிடக்கிறது. இவ்வளவே கொண்டு நாம் த்ருப்தியடைந்துவிடலாமா? இந்த விருதுகள் அர்த்தபர்யவாயியாம்படி முயலவேண்டாமா?

# நரஸிம்ஹாவதார சரிதம்.

முற்காலத்தில் இரண்யகசிபு வென்று ஓர் அசுரர்தலைவன் இருந்தனன். அவன் அரிய பெரிய தவம்புரிகையில் அதற்கு உவந்து பிரமன் பிரத்யக்ஷமானபொழுது வேண்டியவாறெல்லாம் வரம்வேண்டி அவற்றைப் பிரமன் கொடுக்கப் பெற்ற பின்னரே அவன் தவத்தினின்று மீண்டனன். பஞ்சபூதங்களுக்கும் தனித் தனி எவ்வளவு வலிமையுண்டோ அவ்வளவும் அவன் ஒருவனே பெற்றிருந்தான். அப்படிப்பட்ட அவனது வலிமை அரனுக்குமயனுக்கும் அளவிட்டறிந்து அழிக்க வொண்ணாததாயிருந்தது. இந்த ஓர் அண்டத்தில் மாத்திரமே யன்றி எல்லா அண்டங்களிலும் அவன் பெயர் அனைவராலும் போற்றப்பட்டு வந்தது. பூமியின் கீழே எட்டுத் திசைகளிலும் நிலைநின்று பூமிபாரத்தைத் தாங்குகின்ற ஐராவதம் முதலிய அஷ்டதிக்கஜங்களுள் எவையேனும் இரண்டைத் தனது இரண்டு கைகளாலும் வலியப் பிடித்திழுத்து அவற்றை ஒன்றோடொன்று தாக்கவிட்டு வேடிக்கைபார்ப்பது அவன் வழக்கம். பெரிய கடல்களை யெல்லாம் ஒரே தாண்டாகத் தாண்டி அப்பாற் செல்லுமியல்வினன்.

அவன் நதிகளிலும் நீராடான், காளமேகத்தினின்று சொரியும் நீரிலும் குளியான்; கடல் நீரிலும் படியான்; பின்னையோ வென்னில், அண்டகோளத்தை ஒரு பக்கத்தில் துளை செய்து அதற்கப்பாலுள்ள பெரும்புறக்கடலின் நீர் அத்துளையின் வழியாக அண்டத்தினுள்ளே பெருக அதனைக்கொண்டே நீராடுவான். இங்ஙனம் நீராடி நாகலோகத்திலே சென்று அங்குள்ள நாககன்னிகைகளோடிருந்து நற்போகங்களைப் புசித்து, தேவேந்திர லோகத்திற் பகற்காலத்தைக் கழித்து இராப்பொழுதில் பிரமலோகத்திற் கொலுவீற்றிருப்பான். சந்திரன் ஏறிச்செல்லும் விமானத்தில் தான் ஏறித் திரிந்து அவனது அதிகாரத்தைத் தான் செலுத்துவான். அங்ஙனமே ஸூர்யனது தேரில் ஏறி நின்றுகொண்டு அவனது பெரிய பதவியின் அதிகாரத்தையும் தானே செலுத்துவான். அஷ்டதிக் பாலகர்களின் இடங்களிலிருந்து அவர்களுடைய தொழில்களை யெல்லாம் கைக்கொண்டு நடத்துவான். மேருமலையுச்சியில் பிரமன் போல அரசாட்சி புரிந்து கொண்டு வீற்றிருப்பான். பஞ்சபூதங்களுக்கு அதி தேவதைகளாகிய தேவர்களை அந்தந்தப் பதவியில் நின்று ஒழித்து அவர்களின் தொழில்களையும் தானே நடத்துவான்.

உலகங்களில் அவரவர்கள் வைதிகலௌகிக சமயங்களில் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியின் திருநாமங்களைக் கூறும் வழக்கத்தை அறவே யொழிக்கும்படி அச்சமுறுத்தித் தனது இரணியனென்ற பெயரையே கூறும்படி செய்து வந்தனன். அன்றியும், முனிவர் முதலியோர் யாகங்களில் மந்திரபூர்வமாகத் தேவர்களை யுத்தேசித்து இட்டு ஓமஞ்செய்கிற ஹவிர்ப்பாகங்களை யெல்லாம் தானே கைக் கொண்டு உண்பான். த்ரிமூர்த்திகளும் தம் தம் தொழில்களைச் செய்து முடிக்க மாட்டாதவர்களாய்த் தங்கள் உரிமையை விட்டொழிப்பாராயினர். யோகப் பயிற்சியில் தேர்ந்த முனிவர்களும் தம் யோகபலத்தாற் பெறும் பதவிகளைப் பெறாது அவனால் இழந்து விட்டார்கள். தேவர்களும் அவனது பாதங்களை யன்றி வேறொன்றைப் பூசிக்க விரும்பாதாராயினர்.

இவ்விரணியன் தனது பாதங்களைத் தரையிலே ஊன்றி வைப்பானாயின் பூமியைத் தாங்கும் ஆதிசேஷனும் மயங்கித் தளர்வான்; எழுந்து நிற்பானானால் அண்டகோளத்தின்

மேல் முகடு தனது தலையிற் படும்படி அதுவரையிலும் உயர்வான்; இடம் விட்டுச் சஞ்சரிப்பானால் தனது வலிய விசையால் பஞ்ச மஹா பூதங்களும் தன்னோடு கூடவே நிலை பெயர்ந்து வர அவற்றுடனே நடப்பான். அவன் தான் பெற்ற வரத்தினால் பெண்களாலும் ஆண்களாலும் நபும்ஸகராலும் மற்றுமெந்தப் பிராணிவர்க்கங்களாலும் உயிரில்லாதவற்றாலும், மற்றும் கண்களாற் காணப் படுங் காட்சிப் பொருள்களுள் எதனாலும், மனத்தாற் கருதப்படுங் கருத்துப் பொருள்களுள் எதனாலும் இறக்கமாட்டான். பூமியிலும் சாக மாட்டான், ஆகாயத்திலும் சாகமாட்டான். தேவர்களாவது யக்ஷர்களாவது திரிமூர்த்திகளாவது தன்னைக் கொல்லப் பெறான்; வலிமை சிறிதும் ஒடுங்கான். வீட்டினுள்ளேயும் வெளியிலேயும் சாவான். அஸ்த்ர சஸ்த்ரங்களாலும் கொலையுண்ண மாட்டான். இரவிலுஞ் சாவான், பகலிலுஞ் சாவான். இங்ஙனே பலவகைகளையும் பகுத்துக் கூறிச் சாவா வரம் பெற்றிருந்தான் இரணியன்.

இங்ஙனம் மஹா வீர சூரனான இவ்விரணியனுக்கு ப்ரஹ்லாதனெனும் பெயருடைய அருமைப்புதல்வனொருவனிருந்தான். அவன் அறிஞர்களிற் சிறந்த அறிஞன். தூயவர்களில் தலைவனான தூயவன். பகவத் பக்தர்களில் மேம்பட்ட மஹா பக்தன். பல சொல்லியென்? ஸகல ஸத்குண ஸம்பன்னன். இளையோனான அவனைத் தந்தையாகிய இரணியன் வெகு அன்போடும் ஆதரவோடும் வளர்த்து வந்து மிக்க உவப்புடனே ஒரு நன்னாளில் வேதமோதத் தொடங்குமாறு கட்டளையிட்டனன். உடனே அசுரகுருவை வரவழைத்து 'என் அருமைக் குழந்தைக்கு வேதமோதுவிப்பாயாக' என்று சொல்லிக் குமாரனைக் குருவிடம் ஒப்புவித்தனன்.

உடனே மைந்தனைப் பள்ளிக்கு அழைத்துச் சென்று கல்வி கற்பிக்கத் தொடங்கிய ஆசிரியன் "ஹிரண்யாய நம:" என்று முந்துறச் சொல்லி ஆரம்பம் செய்கிற வழக்கப்படி, ப்ரஹ்லாதனை நோக்கிக் கட்டளையிட்டவுடனே அச்சிறுவன் தனது இரண்டு காதுகளையும் இரண்டு கைகளால் நன்றாக மூடிக்கொண்டு 'பெரியோனே! நீ சொன்னபடி சொல்வது நல்லொழுக்கமன்று, முறைக் கேடு' என்று கூறி மறுத்து, வேதாந்த விழுப்பொருளான உண்மைக் கடவுளின் திருநாமத்தை வெளியிட்டுக் கூறினான். திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தை உரக்க உச்சரித்து உள்ளெலாமுருகிக் குரல் தழுத்து உடம்பெலாம் கண்ணீர் சோர நின்று முடிமீது அஞ்சலிசெய்து ஸ்ரீமந்நாராயணனைத் தியானித்து உள்ளம் பூரித்திருந்தான்.

அதுகண்டு அந்தக் குரு உள்ளமும் உடம்பும் நடுங்கப்பெற்று, 'கெடுவாய்! குருவாகிய என்னையுங் கெடுத்து மாணாக்கனாகிய உன்னையுங் கெடுத்துக்கொண்டாய்; நமது பகைவர்களான அந்தத் தேவர்களும் சொல்லத்தகாததாய் என் வாயால் அநுவாதம் செய்யவும் தகாததான வொரு வார்த்தையை நீ சொல்ல மனங்கொண்டது என்னே! இது என்ன ஆச்சரியம்! இப்படியும் ஒரு காரியம் செய்து விட்டாயே! என்று பொடிந்தான்.

பிரகலாதன்;— குரவரே! என்னை நான் ஈடேறச்செய்துகொண்டேன், எனது தந்தையையும் ஈடேற்றினேன்; எனக்குக் குருவாக அமைந்த உம்மையுமீடேற்றி இவ்வுலகத்தினுள்ள எல்லாவுயிர்களையுமீடேற்றத் தொடங்கி முதுவேதத்தின் ஸாரமாகிய நாராயண நாமத்தைச் சொன்னேன், இதில் என்ன குற்றம்? சொல்லும்.

குரு;—பயலே! உன் தந்தையானவர் தேவர்களனைவர்க்கும் தலைவர்களான திரிமூர்த்திகளுக்கும் தலைவர்; அவரது திருநாமத்தை மதித்திருக்கின்ற என்னிற்காட்டிலும் நீ அறி

ஞனே? அடா! இப்பொழுது நீ சொன்ன பெயரை மறுபடியுஞ்சொல்லி என்னைக் கெடுக்காதேகொள்.

பிரகலாதன்;—முழுமுதற் கடவுளாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் திருநாமமல்லது மற்றொன்று நானறியேன். அந்தத்திருமால் எப்பொழுதும் எனது உள்ளத்துள்ளே உறைகின்றார். அவரது திருநாமத்திற்காட்டிலும் சிறந்த சொல் வேறில்லை. வேதமறிந்த முனிவர்களும் உபநிஷத்துக்களும் ஒருமுகமாகக்கொண்டாடும் தெய்வத்தின் திருநாமத்தையன்றோ நான் சொல்வது. இதனில் மிக்கதோர் திருநாமமும் உலகில் உளதோ? வேதங்களைக்கொண்டும் மற்றுமுள்ள பல்வகைச் சாதனங்களைக்கொண்டும் சித்திபெறும் மஹாத்மாக்கள் ஜபஞ்செய்யும் திருமந்திரத்தையன்றோ நான் கூறினேன்; வனங்களிலும் பெரியமலைகளிலும் வசித்துத் தவவேடம்பூண்டு முத்தியடைபவர்கள் பெறும் ஆனந்தத்தையன்றோ நான் இத்திருநாமத்தினால் பெற்றது; இத்திருநாமத்தின் மகிமை அளவிடக்கூடியதோ? பல ஆசிரியர்களிடம் பலகால் கேட்டு உணரவேண்டிய பலநூற்பொருள்களையும் நான்கு வேதங்களின் உட்பொருள்களையும் இத்திருநாமத்தினின்றுமே உண்மைப்பத்தர்கள் உணரப்பெறுவர்கள். எனக்கும் நான்முகன் முதலிய தேவர்கட்கும் ஸர்வஜ்ஞனை தனக்கும் அறியவிலமல்லாத வைபவங்களையுடைய ஸ்ரீமந்நாராயணன் என்மனத்திற் குடிகொண்டுளன்; ஆதலால் நான் மெய்ப்பொருள் கண்டவனாயினேன்; உனக்கும் இப்பொருளே காண் தஞ்சமாவது—என்று இனைய பலவுங்கூறினன்.

இவ்வளவுங்கேட்ட ஆசிரியன் அச்சிறுவனுக்கு யாதொரு மறுமொழியுங் கூறமாட்டாதவனாய் மனங்கலங்கி 'இனி நான் ஈடேறும் வழி என்னே! எனக்கு அழிவுகாலம் வந்திட்டதுபோலும்' என்று சிந்தித்துக்கொண்டு ஓடிச்சென்று இரணியனிடம் சேர்ந்து கனக்கண்டவன் அதிசயங் கூறுமாறு போலக் கூறத் தொடங்கி, "மஹாப்ரபுவே! உனது மகன் நெஞ்சால் நினைத்தற்கும் வாயாற்சொல்லுதற்கும் தகாததானவற்றைச் சொல்லிக்கொண்டு கல்வி பயிலாதிருக்கின்றனன்" என்றான். அதுகேட்ட இரணியன் குருவை நோக்கி என் மகன் சொன்னவற்றைச் சொல்லாய் என்றான். அதற்குக் குரு தலைமேல் அஞ்சலி செய்து கொண்டு "நாதனே! காதுக்கு நாராசம் போன்ற அச்சொல்லை நான் உனக்குச் சொன்னால் நரகத்தையடைவேன், நாவும் வெந்துபோம்" என்றான். அது கேட்ட இரணியன் 'எனது புதல்வனை வெகு சீக்கிரமாக இங்கு அழைத்துவாருங்கள்' என்று ஏவலாளர்க்குக் கட்டளையிட, அவர்கள் ஓடிச் சென்று ப்ரஹ்லாதனிடம் தந்தை கட்டளையைத் தெரிவிக்க; உடனே அவன் தாதையிடம் வந்து வணங்கி நின்றான். அன்னவனை இரணியன் மார்பாரப் புல்கி அருகே உட்கார வைத்து 'குழந்தாய்! உனது குரு வெறுக்குமபடி நீ ஏதோ தவறாகச் சொன்னாயாமே; அச்சொல் யாது? சொல்லு பார்ப்போம்' என்றான்.

ப்ரணவஸ்வரூபியாய் உலகுக்கெல்லாம் ஒப்பற்ற தனி நாயகனான கடவுளின் திருநாமமே யான்கூறியது. உபதேசமாகக் கேட்டுணர்தற்கும் சிந்தனை செய்தற்கும் பிறவித்துன்பக்கடலைக் கடத்தற்கும் மிக உரியதான இத் திருநாமத்திற் காட்டிலும் சிறந்தது வேறொன்றுமில்லையே; குரு வெறுக்கத்தக்கதொன்றும் யான் சொல்லவில்லையே.

இரணியன்;—(குரு பொய் சொல்லி யிருக்க மாட்டார்; உள்ளது உள்ளபடியே கூறுமியல்பினராதலால் அவர் சொன்னதில் பொய்ம்மை ஒன்றுமிராது; குற்றமிருப்பின் தண்டிப்போம் என்று எண்ணி) குழந்தாய்! நீ சொன்ன அச்சொல்லை விளக்கமாகக் கூறுவாயாக என்றான்.

பிரகலாதன் ;—அறம் பொருளின்பங்களுள் விரும்பிய பலன்களை யெல்லாம் கொடுப்பதும் மோக்ஷத்தையளிப்பதுமான எம்பிரான் திருநாமமே நான் சொன்னது; அதற்குத்தான் திருவஷ்டாக்ஷர மஹா மந்த்ரமென்று பெயர். எல்லா உலகங்களிலும் சராசரப் பொருள்கள் அனைத்தின் உணர்ச்சியும் செல்லுதற்கு ஏற்ற இடமாவது அந்தத் திருவெட்டெழுத்தேயாம். சிவபிரான் நான்முகக் கடவுள் முதலாகச் சாதாரணமனிதர்களளவும் இந்தத் திருமந்திரத்தை மறந்தவர் இறந்தவரேயாவர். இதன் மகிமை பிறர்க்கு விவரித்துக் காட்ட முடியாதது. நிஷ்பக்ஷபாதமாகப் பார்க்கவல்ல தெள்ளியஞானம் படைத்தவர்களே இதன் மகிமையை நன்றாகக் கண்டறிந்துள்ளார்கள். அல்லாத பிறர் சிறிதுமறியார். சம்சாரக் கடலைக் கடக்கச் சிறந்த மரக்கலமாயுள்ளதும், எல்லோர்க்கும் ஆபரணம்போலப் பொலிவு செய்வதும், மங்கலச் சொற்களுள் தலைமை பெற்றதும், உபநிஷத்துக்களின் சித்தாந்தமான தத்துவப் பொருளுமாகப் பிரசித்திபெற்ற இத் திருமந்திரத்திற் காட்டிலும் சிறந்தது வேறில்லை. உனது உயிர்க்கும் எனது உயிர்க்கும் மற்றுமெல்லாவுயிர்கட்கும் இத்திருமந்திரமே எல்லா நன்மைகளையும் விளைக்கவல்லது என்று நன்றாக ஆலோசித்தே இதனை நான் சொன்னேன் என்று வெகு கம்பீரமாகச் சொல்லி முடித்தான்.

பிரகலாதன் இங்ஙனஞ் சொல்லக்கேட்ட இரணியன்—அடா பயலே! நான் பிறந்த நாள்தொடங்கி இன்றளவும், நீ குறித்த பெயரைச் சொன்ன வாயையும் சிந்தித்த நெஞ்சையும் என்னுடைய ஆணை சுடுமென்பது மூவுலகிலும் ப்ரஸித்தம்; அப்படியிருக்க இந்தப் பெயரை உனக்குச் சொன்னவர் ஆர்? நீ இதனை யாருடனே கற்றுக்கொண்டாய்? மும்மூர்த்திகளும் மற்றைத்தேவர்களும் முனிவர்களும் எப்பொழுதும் சிந்திப்பது என் கழலிணையே, துதிப்பது என் பெயரே; ஆதலின் அவர்களெல்லோரும் உனக்கு இந்தப் புதிய பெயரைக் கூறுவதற்கு அஞ்சுவர்களே; பிள்ளாய்! இதனை நீ வேறு யாரிடத்து உணர்ந்தாய்? என்னோடு போர் செய்யும்பொருட்டுப் பலதரம் எதிர்த்துவந்து என் முன் நிற்க மாட்டாமல் கருடனது வேகத்தால் தப்பி யோடிச் சென்று மறைந்து பாற்கடலிலே புகுந்தொளித்துக்கொண்டு இன்னமும் வெளிவராமல் உறங்குபவனாகிய விஷ்ணுவின் பெயரை உனக்கு எல்லா நன்மைகளையும் விளைவிப்பதாகக் கூறினவர் யாரோ? நம் குலத்தில் தோன்றிய எண்ணிறந்த பல பெரியோர்கள் அந்த விஷ்ணுவினால் அழிந்தவர்களாயிருக்க இதனை நீ அறிந்துவைத்தும் அவன் பெயரைச் சொல்லத்துணிந்த துர்ப்புத்தி என்னோ? தன் இனத்திற்குப் பகையாகிய பாம்பின் பெயரை எலி பக்தியோடு கூறுவதுமுண்டோ? வலிமையிற் சிறந்த எனது உடன் பிறந்தவனான ஹிரண்யாக்ஷனை ஒரு பன்றியின் வடிவமாய்த் தோன்றிக் கொன்றவனது பெயரைப் பகர்வதற்காகவோ உன்னை நான் பிள்ளையாகப் பெற்றது?

எவ்வுலகங்கட்கும் எவ்வுயிர்கட்கும் நானே தலைவனாகவும் நானே எல்லாப் பொருள்களையும் படைத்துக்காத்து அழிக்கவல்லவனாகவுமிருக்க இந்த ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தைக் கொண்டு என்னையே முழுமுதற் கடவுளாகத் துணிதலை விட்டுக் காணப்படாதானொருவனைக் கடவுளாகத் துணிய உனக்கு மனம் வந்ததே! நீ வாழக்கடவையோ? ஆதிகாலத்தில் தவமகிமையினால் விஷ்ணுவென்றும் பிரமனென்றும் சிவனென்றும் சிறந்த நிலைமையை யடைந்தவர்கள், யான் பின்பு கொடுந் தவம் புரிந்து தலைமையை யடைந்ததனால் எனது பாதுகாப்பின்கீழ் அடங்கியுள்ளார்கள். அசுரர்களாகிய நமக்கு இயற்கையிற் பகைவர்களான திருமால் முதலிய தேவர்கள் என் சிறப்பைக்கண்டு அசூயை கொண்டு என்னினுஞ் சிறப்பாக யாகமும் தவமும் செய்வாராயின் அவர்கள் என்னினும் மேம்படக் கூடுமென்றெண்ணி நான் அவர்களை அங்ஙனஞ் செய்யவொட்டாதபடி எனது வலிமையால் தடுத்திட்டேன்; அன்றியும் அப்படிப்பட்ட சிறந்த யாகம் தவம் என்பவற்றின் தன்மையை அறியலாம்படி அவர்கள்

சாஸ்த்ர விசாரஞ் செய்தலும் கூடாதென்று மறுத்திட்டேன்: ஆகவே அவர்கட்கு என்னினும் மேம்பாடு அடைய ஒருபடியாலுமாகாது; ஆகையால் அவர்களெல்லாரும் என்னையே தங்களுக்கெல்லாம் கடவுளாகக்கொண்டு தங்கள் காரியங்களிலெல்லாம் என்னையே துதித்து வாழ்கின்றனர் காண்; பயலே! இப்போது நீ தவறு செய்ததை நான் பொறுத்தேன்; மீண்டும் இத்தன்மையனவான பயனற்ற வார்த்தைகளைச் சொல்லாதே: குருவின் கட்டளையே காக்கத்தக்கதென்று துணிந்து இனி அவரது கட்டளையின்படி வேதமோதுவாயாக; போ, என்று மிகுந்த கோவக்குறியுடன் சொல்லி முடித்தனன்.

இவ்வளவுஞ் சொல்லக்கேட்ட ப்ரஹ்லாதன் மீண்டும் தந்தையை நோக்கிச் சொல்ல ஆற்றுன்;—அப்பா! உனக்கு நான் உணர்த்த வேண்டுவன பலவு முண்டு; கேளாய்: கல்விச் சாரமாக யான் சொல்லும் வார்த்தை சுருக்கமுடையதாயினும் பிறருடைய சாதாரணமான கல்விஞானம் முழுவதையும் தன் வசமாக்கவல்லது; அங்ஙனம் யான் சொல்வதைக்கேளாய். "வித்தின்றி விளைவதொன்றில்லை" என்னும் பழமொழி உனக்குத் தெரியாததன்றே. மூல காரணப் பொருளாகிய கடவுளொருவரில்லாமல் பிரபஞ்சத்தோற்றம் நிகழாது காண். நீ கொண்டுள்ள விபரீத ஞானத்தை யொழித்து உண்மையை யுணர விரும்புவாயானால் தத்துவப்பொருளை உனக்குக் கையிலங்கு நெல்லிக்கனியாகக் காட்டித்தருவேன்.

ஆதியில் உலகங்களைப் படைத்தவனும் பிரளய காலத்தில் அவையனைத்தையும் தனது திருவயிற்றினுள்ளே அடக்கிவைத்துப் பாதுகாப்பவனும், எல்லாப் பொருளினிடத்தும் அந்தர்யாமியாய் எள்ளினுள் எண்ணெய்போல உள்ளும் புறமும் கலந்து பொருந்துபவனும் அவனே காண். வேதாந்தமாகிய உபநிஷத்துக்களில் தெளிந்து சித்தாந்தப் படுத்திக்கூறிய பரதத்துவம் அவனே காண். இத்தத்துவமுணரும் பாக்கியம் மாஞானிகட்கே உள்ளதொன்றும். சகலப் பிரபஞ்ச வடிவமாய்ப் பரிணமித்துப் பல்வேறு வகையாகத் தோன்றினும் தனது தனி நிலைமை மாறுபடாமலேயுள்ள அக்கடவுளின் தன்மை யாவராயினும் அறியும்படி ஓரளவிற்பட்டதாமோ? யாகம் முதலிய கிரிசைகளும் அவற்றின் பலனும் அப்பலன்களைக் கொடுத்தருளுகிற முதற் கடவுளும் அப்பயன்களைப் பெறுகிற சீவனும் அவ்வெம்பெருமானது சொரூபமே. அவனது பெருமையையும் அருமையையும் எவரேனும் அறிவரேல் துன்பக்கடல் கடந்து இன்ப வீடடைவர். சேதனர்கள் செய்யும் ஒவ்வொரு ஸுக்ருதமானது ஒவ்வொரு பலனை யளிக்கக் கூடியதேயன்றி ஒன்றே எல்லாப் பலன்களையு மளிக்கக் கூடியதன்று; அப்பரமனது கருணையோவெனின் நினைத்த நினைத்த பயன்களையெல்லாம் அளிக்கவல்லது. பற்பல தேவர்களை உத்தேசித்துச் செய்யும் ஹோமங்களின் முடிவில் அத்தேவர்கட்கெல்லாம் தலைவனை திருமாலைக் குறித்து "ஓம் ஸ்ரீ விஷ்ணவே ஸ்வாஹா" என்று சொல்லி ஓர் ஆகுதி செய்வர்கள்; அந்த ஆகுதி ஸகல சராசரத்துக்கும் த்ருப்தியளிக்கும் தன்மையை நோக்கி அவ்வெம்பெருமானது உண்மையை யுணரலாம்.

பிரமன் முதலிய உயிர்களெல்லாம் அப்பெருமானது திருநாபிக்கமலத்தின் ஒரு பகுதியிலே தங்கும். சிந்தைக்கும் கோசரமல்லனை அத்திருமால் காண்பவர்களினுடைய கண்களினுள்ளும் மறைந்துள்ளான்; மாஞானியர்களின் மனத்தில் நிறைந்திருப்பான்; பஞ்ச பூதங்களினும் அந்தர்யாமியாய் மறைந்துள்ளான். ஸகலப் பிராணிகளினுடையவும் மனமொழி மெய்களிற் பொருந்தியுள்ளான்: அவனது நிலைமையை ஆலோசிக்குமிடத்து, ஓர் அக்ஷரமாகிய ஓமென்னும் பிரணவத்தில் மறைந்துள்ளான், ஸகல வேதங்களினும் விரிந்துள்ளான் என்னத்தகும். காமம் வெகுளி முதலிய தீய குணங்களைத் தன்னடியார்க்குத் தீர்த்தருள்கின்ற அத்திருமாலினது திருநாமங்களின் மகிமையும் அவனது படைப்பமைப்புக்

கெடுப்புத் தொழில்களின் திறமும் எவராலேனும் சொல்லித் தலைக் கட்டற்பாலனவோ? இங்ஙனம் ஒப்பற்ற பெருமைவாய்ந்த ஸ்ரீமந் நாராயணனை இகழ்வதனால் அந்தோ! நீ பெற்றிருக்கின்ற செல்வங்களும் ஆயுளும் பெயரும் அழிவது மாத்திரமேயன்றி நிலைபெற்ற வுயிரையும் நீ யிழக்கின்றனையே யென்று நானிரங்கி அப்பெருமானது திருநாமத்தைத் துதித்து அவனை வாழ்த்தினேன், என்ன பிழை செய்தேன் சொல்லிக் காண் என்று கூறி முடித்தான் (பிரகலாதன்).

இவை கேட்டலும் இரணியனுக்குண்டான கோபம் வருணிக்க இயலாததாயிருந்தது. எல்லாவுலகங்களும் அஞ்சும்படி யெழுந்த அக்கோவத்தின் உக்கிரத்தால் ஸூர்யன் முதலிய சோதிகளும் மேலுலகமும் சுழலலாயின; பூமியினிடங்கள் அசையலாயின; ரத்தத்தைச் சொரிந்த அவனது கண்களினின்று புகைகள் மேலெழுந்தன; இங்ஙனம் கோபத்தின் எல்லையிலே நின்ற அவன் தனது பரிஜனங்களை நோக்கி 'இப்பாவிப்பயலுக்கு இதனைக் காட்டிலும் என்னோடு விளைக்கும் பகைமை வேறொன்று முள்ளதோ? வஞ்சனையாக என் குடலிலே ஊறியிருந்து இப்படிப்பட்ட பகைவடிவமொன்று உண்டாயிற்று; இவனது எண்ணத்தை இன்னமும் அறியவேண்டுவதில்லை; எனது தொன்று தொட்ட பகைவனான திருமாலுக்கு அன்புமிக்க தொண்டன் யானென்று கூசாது கூறுகின்ற இவனைக் கொன்றிடுங்கள்' எனக் கட்டளையிட்டனன். உடனே யமகிங்கரர்கள் போன்ற அசுரர் பலர்வந்து பிரகலாதனைப் பிடித்துக் கொண்டார்கள்.

கோபாக்கினி சொலிக்கின்ற அஞ்சாத நோக்கை யுடையவர்களான அவ்வசுரர்கள் ஒரு யானைக் குட்டியைப் பல சிங்கக் கூட்டங்கள் வந்து சூழ்ந்துகொண்டாற்போல அப்பிரகலாதனைச் சூழ்ந்துகொண்டு அரண்மனைவாயிலின் பெரு வெளியிலே அவனைக்கொண்டு போய்ச் சேர்த்து ஆயிரக்கணக்கான மழுக்களையும் கூரிய வாட்படைகளையும் உயரவெடுத்து அவன்மீது வீசினார்கள்; உயிருடனே இவனுடலைத் தின்று விடுவோமென்று சொல்லிக்கொண்டு இடிபோல் பயங்கரமாக அதட்டினார்கள். அவர்கள் வீசியெறிந்த மழுக்களும் வாட்களும் பரமபக்தனான அவனை யாதொன்றும் செய்யமாட்டாவாயின! தாக்கவும் குத்தவும் பிளக்கவும் அவர்களெறிந்த ஆயுதங்களெல்லாம் அவனுடலிற் பட்டவளவில் முறிந்து நுண்ணிய துகள்களாயொழிந்து அவனுடம்பு முழுவதிலும் தினவு சொறிதல் போன்ற தன்மையையும் செய்யாவாயின; அங்ஙனமாக அவன் எம்பெருமானது இணைத்தாமரையடிகளையே மேன்மேலுஞ் சிந்தை செய்து கொண்டும் அவனது திருநாமத்தையும் உயர உச்சரித்துக்கொண்டும் விளங்கினன்.

பின்பு அவ்வசுரர்கள் இரணியனிடஞ்சென்று "வலியோனே! எங்களிடமிருந்த சிறந்த பெரிய ஆயுதங்களெல்லாம் பொடியாய் விட்டன, அவற்றால் உன் பிள்ளையினுடம்புக்குச் சிறிது தீங்கு முண்டாகவில்லை; இனி நாங்கள் செய்யவேண்டிய செயல் யாதோ கட்டளையிடவேணும்" என்று கூற, அது கேட்ட இரணியன் "அப் பயல் மாய மனத்தனனாதலால் அம்மாயையின் வலிமைகொண்டு ஆயுதங்களைக் கட்டிவிட்டான் போலும்; இருக்கட்டும். விரைவாக நெருப்பை மூட்டி நிறைத்து அதில் அவனைத் தள்ளுங்கள்" என்றுரைத்தான்; அங்ஙனமே அவ்வசுரர்கள் நெருப்பை மூட்டுந் தொழிலிலே முயன்று நின்றார்கள். ஒரு பெருங்குழியிலே விறகுகளை மலைபோல உயரமாக அடுக்கி குடங்குடமாக எண்ணெயையும் வெண்ணெயையும் நெய்யையும் சொரிய, நெருப்பு வானத்தளவு மெழுந்து சொலிக்க அதில் பிரகலாதனை யெடுத்துப் பொகட்டார்கள். அப்போது அவன் ஹரிநாமஸங்கீர்த்தனமே செய்துகொண்டிருக்கவே அந்த நெருப்புக் குளிர நின்றது.

உடனே அசுரர்கள் இராணியனிடம் ஓடிச்சென்று "மகாப்ரபுவே! உன் மைந்தனைச் சுழன்றெரிகின்ற நெருப்புமிக்க பெருங்குழியிற் போகட்ட பொழுதும் அந்த நெருப்பு அவனை எரிக்கவில்லை; இனி மற்றும் நாங்கள் செய்யத்தக்கது யாது?" என்ன, இரணியன் கோபாக்னி பொங்கியெழுகின்ற கண்ணினனாய் "என் கட்டளைக்கு இணங்கி நடவாத அக்கினிதேவனையும் கட்டிக் கொடிய சிறையில் வைத்திடுங்கள்; எனது கள்வக்குமாரனைப் பிடுங்கித்தின்னுமாறு அஷ்டமகாநாகங்களையும் அவன்மேல் ஏவுங்கள்" என்றனன். அவ்விரணியன் நினைத்தமாத்திரத்தில் அனந்தன் முதலான அஷ்டமகாநாகங்கள் அங்கு வந்து சேர்ந்து ப்ரஹ்லாதன் மேற்பாய்ந்து தம்விஷப்பற்கள் அழுந்த ஊன்றிக் கடிக்கவும் ஸ்ரீ சேஷசயனனான ஸ்ரீமந் நாராயணனிடத்துப் பரமபக்தியே வடிவெடுத்த அச்சிறுவன் சிறிதும் வருந்திற்றிலன். பாம்புகளுக்கு வைரியாகிய கருடனும் நடுக்கமடையும்படி அந்த அஷ்டமகாநாகங்கள் பிரகலாதனைக் கடித்துப்பிடுங்கியபொழுது அவற்றின் பற்கள் வலிமையொழிந்து ஒடிந்து உதிர்ந்தன; கடிப்பதற்காக அவை பற்களை ஊன்ற வைத்த பொழுது அவற்றின் துளைகளிலிருந்தெல்லாம் விஷம் பாயாமல் அமுதத்துளிகளே ஊறி யொழுகின.

அங்ஙனமாக அசுரர்கள் இரணியனிடஞ்சென்று 'பிரகலாதனுடம்பைச் சூழ்ந்து கொண்ட நாகங்கள் அவனுக்கு ஒரு தீங்கும் செய்யமாட்டிற்றில்' என்று புகலவே, திக்கஜங்களிற் சிறந்த ஐராவதயானைக்கு இவனை இரையாக இடுங்கள்' என்று சொல்லிவிட்டா னிரணியன். உடனே தேவேந்திரன் தனது யானையை விரைவிற் கொணர்ந்தனன். அசுரர்கள் பிரகலாதனைக் கைகளிலும் கால்களிலும் மார்பிலும் கழுத்திலும் மந்திரப்பாசங்களால் இறுகக்கட்டி அந்த யானையின் எதிரிலே போகட்டார்கள். அப்பொழுது பிரகலாதன் அந்த யானையை நோக்கி 'முற்காலத்தில் உன் இனத்தவனான கஜேந்திராழ்வான் முதலையினாலிடர்ப் பட்டபோது முழுமுதற்கடவுளைக் கூவியழைக்க அப்பெருமான் வந்து இடர்தீர்த்த செய்தி உனக்குத் தெரிந்திருக்கலாமே; அப்பெருமான் காண் எனதுள்ளத்துள்ளே யுறைகின்றான்' என்றுகூற, உடனே அந்த மதயானை அவனைத் தலைவணங்கி நமஸ்கரித்து அஞ்சி விலகிச் சென்றது.

இச் செய்தியை அசுரர்கள் வந்து சொல்லக்கேட்ட இரணியன் மனங்கொதித்து அவ்வசுரர்களை நோக்கி 'வீரர்காள்! திருமாலை மதித்து எனது கட்டளையை அவமதித்த இந்த யானையை நீங்கள் சென்று கொல்லுங்கள்' என்று கட்டளையிட அவர்களும் அப்படியே அக்களிற்றைக் கொல்வதாக நெருங்கியவளவிலே அது அஞ்சித் தனது தந்தத்தால் பிரகலாதனைக் கொல்லவந்தது. அப்போது அவனது மார்பிலே அழுத்தின தந்தங்கள் நான்கும் வாழைத்தண்டு போல் எளிதில் ஒடிந்தன. இச்செய்தியையும் அசுரர்கள் இரணியனிடஞ் சென்று அறிவித்து 'உன் மகனது உயிர் கவர்தற்கு அரிதே' என்று கூற, அதுகேட்ட விரணியன் கோடைகாலத்துச் சூரியனிலும் உக்கிரமான கண்களையுடையனாய் 'அப்படியாயின் ஒருவராலும் அசைக்கமுடியாத பெரிய மலையுடனே அவ் வஞ்சமகனை இறுக்கிக் கட்டிக் கொண்டு போய்க் கரைகாணவொண்ணாத கடல் வெள்ளத்திலே தள்ளிவிடுங்கள்' என்று ஏவினான். இவர்களும் விரைந்து சென்று இங்ஙனமே செய்ய, அக்கடல் தானும் பிரகலாதனது பக்திப் பிரபாவத்தினால் சிறிய மடுப்போன்றதாய் அவனைச் சார்த்திக்கட்டிய மலையும் சுரைக்குடுவைபோன்றதாயிற்று. ஆகவே அச்சிறுவன், கடலிலே அழியாமல் மிதந்து மேலே பொருந்தியுள்ள மலையின்மீது படுத்தபடியிருந்தவனாய் விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸங்கீர்த்தனத்தில் ஊன்றிவிட்டான். பிரளய வெள்ளத்திலே ஆலிலையின்மீது சிறுகுழவியாய்ச் சயனித்த திருமால்போலக் கடல் வெள்ளத்திலே மலையின்மீது பள்ளிகொண்டு அபாய லேச

மூமின்றிப் பொலிகின்ற பிரகலாதன் தலைமேல் கூப்பிய கையனாய் உறுதிநிலை தவறாத மனத்தனாய்த் திருமாலைத் துதி செய்யலுற்றான்.

மலையோடுகட்டிக் கடலிற் போகட்டும் பிரகலாதன் இறவாதிருத்தலையும் அவன் திருமாலைப் பலவாறு துதிசெய்துகொண்டிருத்தலையும் அசுரர்கள் வந்து சொல்ல அறிந்த இரணியன் 'உடனே அவனைக் கொணர்ந்து என் முன்னே விடுங்கள். இவன்கொண்ட பைத்தியம் நீங்கும்படியான உபாயத்தைச் செய்வோம்; அதாவது கொடிய விஷத்தினாற் கொல்வோம்' என்று கொதித்துக் கூறினன்.

உடனே அசுரர்கள் பிரகலாதனுக்கு மிகக்கொடிய விஷத்தை ஊட்டினார்கள்; அதனால் அவன் சிறிது மயக்கமுமில்லாதிருந்தான். பிறகு இரணியன் கொடிய குதிரைச்சம்மட்டிகளால் அடித்துக் கொல்லும்படி ஏவினான்; அதுவுஞ் செய்து பார்த்தார்கள். எண்ணிறந்த பல்லாயிர வசுரர்கள் சம்மட்டிகளால் வீசி யடித்தபோது, காண்பாரனைவரும் இனியிவன் பிழையான் என்னும்படியாகவே யிருந்தது; ஆயினும் பிரகலாதன் 'தோள்களாயிரத்தான் முடிகளாயிரத்தானை எம்பெருமான் என்னுள்ளத்துள் உறையும்போது எனக்கென்ன குறை' என்றே சிரித்துக்கொண்டு சொல்லிக்கொண்டிருந்ததனால் ஒருவகையான அபாயமும் பெற்றிலன்.

என்ன செய்தும் பிரகலாதன் இறவாததைக் கண்டு இரணியன் 'இந்தப் பையல் அசுரர்கட்கு உரியதொரு மாயையினால் இறவாதிருக்கைக்கு உரிய உபாயத்தை இயல்விலே உடையான் போலும்; இருக்கட்டும்; இனி இவனுயிரை யானே கவர்வேன்' என்று சொல்லிச் சீறிச் சிவந்து உறுமிக்கொண்டு சிறுவனருகில் வந்தனன். வந்த தந்தையை மைந்தன் வணங்கி 'எந்தாய்! எனது நிலைபெற்ற வுயிரை நீ கவர்ந்துகொள்ள நினைத்தாயெனினும் இவ்வுயிர் உன்து வசத்திலுள்ளதன்றே; சகல லோகங்களையும் ஒருங்கு படைத்தருளியவரான ஸ்ரீமந்நாராயணமூர்த்தியே கொள்ளும்படி யுள்ளதன்றோ இவ்வுயிர்; எதுக்கு வீண் பிரயாஸம்? என்றனன்.

இரணியன் : பயலே! நீ சொல்லுகிறபடி உலகங்களைப் படைத்தவர் எவர்? என் பெயரைத் துதித்துக்கொண்டு வாழ்கிற திரிமூர்த்திகளா? அல்லது என்னையே ஏத்தி யிறைஞ்சுகின்ற முனிவர்களா? அல்லது தங்களுடைமைகளை யெல்லாம் எனக்குத் தோற்று இழந்த தேவர்களா? அல்லது மற்றும் யாரேனுமா? விளங்கச் சொல்லடா. அவனை நான் காண முடியுமாகில் காட்டுதலும் செய், பார்ப்போம்.

பிரகலாதன் : தந்தை! உலகங்களைப் படைத்தவனும் அவ்வுலகங்களிலுள்ள பல பிராணிகளைப் படைத்தவனும் அவற்றுள் அந்தர்யாமியாய் உறைபவனும் யாவனென்னில், மலரில் மணமும் எள்ளில் எண்ணெயும் போல எங்குங் கலந்து நிறைந்திருக்கின்ற திருமாலே காண். அப்பெருமான் என் கண்களாற் காணுமாறு எங்குமிருக்கின்றான்; இவ்வுண்மையை உனக்கு நான் உள்ளபடியுரைத்தால் இது நிச்சயமானதென்று நீ ஏற்றுக்கொள்ளுகின்றிலை; இங்ஙனம் நீ நம்பிக்கை கொள்ளாததனால், உனது சகோதரனை ஹிரண்யாக்ஷனது உயிரைக் கவர்ந்த அத்திருமால் உனது கண்களாற் காண எளியவனாவனோ?

இரணியன் : (அது கேட்டுச் சிரித்து) பயலே! நீ சொன்ன வொருவன் எப்பொருள்களிலும் உட்புகுந்து வசிக்கின்றானென்பதை நன்றாகச் சோதித்துப் பார்த்துப் பின்பு அதற்கேற்ற காரியத்தைச் செய்வேன்; நீ சொன்ன அத்திருடன் இந்தத் தூணினுள்ளே மறைந்து நின்றுள்ளானாயின் அவனது அந்நிலைமையை திருஷ்டாந்தப்படுத்துவாயாக.

பிரகலாதன்: யான் சொன்ன அந்த எப்பெருமான் ஓர் அணுவை நூறு கூறுகப் பகிர்ந்து பகுப்பிலுமிருக்கிறான், மகா மேரு மலையிலுமிருக்கிறான், இவ்விடத்துள்ள இத்தூணி லுமிருக்கிறான்; நீ அவனைக்குறித்து இகழ்ச்சியாகச்சொன்ன சொற்களிலுமிருக்கிறான்; இவ் வுண்மையை நீ விரைவில் சோதித்து அறிவாயாக.

இரணியன்: உலகம் முழுவதிலும் வியாபித்துள்ளவனாக நீ சொல்லும் அத்திருமாலை இந்தத் தூணினிடத்தே நான் காணுமாறு நீ காட்டாமற் போவையானால யானையைச் சிங்கம் கொல்வதுபோல உன் யான்னை எளிதிற் கொன்று உனது ரத்தத்தைக் குடித்து உன் னுடலையும் தின்பேன்.

பிரகலாதன்: தந்தை! என்னுயிர் உன்னாற் கொல்லப்படுதற்கு எளியதன்று; நான் சொன்னபடி திருமால் நீ தொட்ட இடங்களிலெல்லாம் வெளிப்பட்டுக் காணப்படாமற் போவனாயின் என்னுயிரை நானே மாய்த்துக்கொள்வேன்; அங்ஙனம் செய்யாமல் பின்பும் இவ்வுலக வாழ்க்கையை விரும்பி ஜீவித்திருப்பேனாயின் அப்பெருமானுக்கு நான் அடியவ னல்லேன்.

இங்ஙனம் பிரகலாதன் பிரதிஜ்ஞை பண்ணிக்கூறினது கேட்ட இரணியன் பரிஹாஸக் கருத்துடன் சிரித்துக் கோபித்து எதிரிலுள்ள ஒரு தூணிலே கனவேகமாகத் தன் கையா லறைந்தான். அங்ஙனம் அறைந்தவளவிலே அதனுள்ளே சிவந்த கண்களையுடைய சிங்க பொன்று தனது ஆரவாரத்தால் திக்குக்களைக் கிழித்து அண்டகோளத்தைப் பீறிக்கொண்டு சிரித்தது. திருமால் அங்ஙனம் சிங்க வடிவத்தோடு தூணினுள்ளே சிரித்தவுடனே பிரகலா தன் பெருமகிழ்ச்சிகொண்டு கூத்தாடினான்; ஆனந்தக் கண்ணீர்விட்டு அழுதான்; கீதம்பாடி ஆரவாரித்தான்; தலைமேல் கைகூப்பினான்; கீழே விழுந்து வணங்கினான்; துள்ளித்துள்ளிக் குதித்தான்; இனைய பலவுஞ் செய்தான்.

இரணியனோவென்னில் அச்சிரிப்பைக்கேட்டு 'யாரடா நீ? இப்பயல் சொன்ன திரு மாலோ நீ? நீ முன்பு எனக்கு அஞ்சிப்புக்கு ஒளித்துக்கொண்டிருந்த கடலில் இடம் போதா தென்று இத்தூணைத்தேடி இதனுள்ளும் ஒளித்தாயோ அடா? என்னோடு நீ போர் செய்ய வல்லையாகில் வெளிப்புறப்படடா' என்று கூசாது இகழ்ந்து கூறினன்.

உடனே அந்தத்தூணும் பிளவுபட்டது; அவ்விடத்தினின்று சிங்கமூர்த்தியும் வெளித் தோன்றிற்று; அத்திருவுருவம் எட்டுத்திசைகளையும் அளாவி வளர்ந்தது; அண்டரண்டபகி ரண்டங்களையும் அளாவிற்று; அண்டகடாஹம் கீழும்மேலும் பீறிப் பிளந்தது. அந்த நர சிங்கமூர்த்தி வானத்தில் ஊடுருவிச்சென்ற எல்லையை அறியவல்லாரில்லை; திருவடிகள் பூமி யிற்படும்படி நின்ற அச்சமயத்தில் ஸத்யலோகத்திலிருந்த பிரமன் அப்பொழுதே அச்சிங்கப் பிரானது திருநாபியில் தோன்றியவன்போல விளங்கினான். [பிரமன் நரசிங்கமூர்த்தியின் நாபியளவிலே நின்றனனென்ற விதனால் அப்பெருமான் மேலோங்கிச் சென்ற எல்லையின் வரையறை அறிய முடியாமைதன்ற தாயிற்று.] அப்பெருமானுடைய திருக்கைகளை இத்தனை யென்று கணக்கிடவல்லார் ஆருமில்லை. தன்னெதிர்ப்பட்ட அசுர சேனையிலுள்ள ஆயிரங் கோடி பேரில் ஒவ்வொருவனையும் ஒவ்வொருகையால் அள்ளிக் கொண்டனனாதலால் அத் திருக்கைகளை எங்ஙனே எண்ணி முடிப்பது. ஆயிரங்கோடி வெள்ளமாக எதிர்ப்பட்ட அசுர சேனையிலுள்ள ஒவ்வொருவர்க்கும் எதிராக ஒவ்வொரு திருமுகம் இவ்விரண்டு திருக்கைக ளும் அம் முகங்களிலெல்லாம் மூன்று திருக்கண்களுமாக அப்பொழுது எம்பெருமான் கொண்ட விசுவரூபம் அரியபெரிய காட்சியாக இருந்தது.

அச் சிங்கவடிவத்தின் பிடரியில் எழுந்து வளர்ந்து தொங்குகின்ற நீண்ட மயிர்த் தொகுதியானது பிரளய காலாக்னியின் ஜ்வாலைகளை வென்றிட்டது. அச்சிங்க மூர்த்தியின் உள்நின்று வெளிப்படுகிற சுவாசக் காற்றானது ஊழிக்காலத்துப் பிரசண்டமாருதத்தை வென்றிட்டது. பிரளயகாலத்தில் திருமாலினது திருவயிற்றிலடங்கியிருந்த அண்டங்களும் சராசரங்களுமாகிய அனைத்தும் அதுபோலவே இப்பொழுதும் விசுவரூப நரசிங்கமூர்த்தியின் திருவயிற்றினுள்ளே அடங்கியிருந்தன. துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனத்தின் பொருட்டுத் திருவவதரித்த அந்த நரசிங்கப் பிரான் கொடிய அசுரர்களைக் கொல்பவனாகி, அங்ஙனல்லாத சாதுக்களையெல்லாம் அப்பொழுது தன் வயிற்றினுள் வைத்துத் தாய்போலப் பாதுகாத்தருள்பவனாயினன்.

அச்சிங்கப்பிரான், கொடுமையிற் பெயர்பெற்ற அசுரர்களிற் பலரைத் தனது வக்கிர தந்தங்களில் அடக்கிக்கொண்டு கடித்து உட்கொள்வன்; பூமியிலே தேய்ப்பன்; புறவண்டங் களிலே மோதுவன்; மகா மேருமலையில் தாக்குவன்; விரல்களாற் பிசைந்திடுவன்; கடல் நீரினுள்ளே ஆழ அமுக்கி மேலே குமிழியெழும்படி செய்வன்; படபாமுகாக்னியிலே இட்டு வாட்டுவன்; இருபிளவாகத்துண்டித்திடுவன்; வாய்களைப் பிடித்துக் கிழித்திடுவன்; வலிய தோலை உரித்தெடுப்பன்; கண்களைத் தோண்டியெடுப்பன்; குடலைக் கைகளாற்பற்றித் துண்டிப்பன்; தனது கைந்நக சந்துகளிலே பதுங்கிய அசுரர்களை மற்றை நகங்களால் அழுத்திக் கீண்டெறிவன். அவ்வசுரர்கட்கு வாகனமாகிய யானை தேர் குதிரை முதலானவற்றைக் கடித்துத் தின்றொழிப்பன். ஸப்தஸாகரங்களையும் பருகுவன்; வானத்திலுள்ள மேகங்களை இடிகளுடனே உட்கொள்வன். ஆக இப்படியான உக்கிரத்தைக்கண்டு "இந்த நரசிங்க மூர்த்தி எவ்வகையினும் கோபம் தணியாது போலும்" என்று தரும தேவதையும் அஞ்சி நடுங்கிற்று.

அக் கோளரியுருவன், இரணியனும் அவனது புதல்வனான பிரகலாதனும் தவிர மற்ற அசுரர்களையெல்லாம் வெகு விரைவிலே கொன்று நின்றனன்; இந்நிலைமையில் இரணியன் வாளும் கேடகமுமேந்திப் பேராரவாரஞ்செய்து உதட்டை மடித்துக் கடித்துக்கொண்டு சீறிச் சிவந்து அச்சிங்கமூர்த்தியோடு போர் செய்யுமாறு எதிரிற் சலியாது நின்றனன். அங்ஙனம் நின்றபடியைப் பிரகலாதன் நோக்கி, "எனது அருமைத் தந்தையே! இந்த நரசிங்க மூர்த்தியின் நிலைமையைப் பார்த்தும் உன் உள்ளத்தில் சிறிதும் நல்லறிவு கொண்டனையில்லை போலும்; இப்பொழுதாகிலும் எனது திருமாலை வணங்கமாட்டாயோ? வணங்கின அளவிலேயே அப்பெருமான் உனது குற்றங்களையெல்லாம் பொறுத்தருள்வான்" என்று இதமுரைத்தனன். அதுகேட்ட இரணியன் "அடா பயலே! ஒருநொடிப் பொழுதில் இச் சிங்கத்தின் தோள்களையும் தாள்களையும் வெட்டித்தள்ளி உன்னையும் துண்டித்து, அங்ஙனம் வெற்றிதந்த எனது வாட்படையை யான் வணங்குவதேயல்லாமல் பிறரை வணங்குவதென்பதுமுண்டோ?" என்று சொல்லி நகைத்தான்.

நகைத்ததோடும் நில்லாமல் மிக்க கோபங்கொண்டு அந்நரசிங்கமூர்த்தியை எதிர்த்தற்கும் நெருங்கினன். அப்போது அத்திருமால் மிகப்பலவான தனது கைகளினாலும் கால்களினாலும் அவ்விரணியனைச் சூழ்ந்துகட்டிப் பிடித்தான். தனது பெரிய கைகளிலொன்றினால் அவ்விரணியனது கால்களிரண்டையும் ஒருசேரப்பிடித்துச் சுழற்றினன். அப்போது இரணியனது காதுகளிலணிந்திருந்த இரண்டு கனமகரக்குழைகளும் சிதறி நெடுந்தூரத்துக் கப்பால் சென்று விழுந்தொழிந்தன. இங்ஙனே அவனைப் படாதபாடுகள் படுத்தி மடியிடை

வைத்துக் கைந்நகங்களை அவனது மார்பில் ஊன்றியவளவிலே இரத்தவெள்ளம் அபரிமிதமாகப் பெருகிற்று. அசுரர்கோமான் தொலைந்தொழிந்தனனென்று, இதுவரையில் அவனுக்கு அஞ்சியோடியொளித்திருந்த தேவர்கள் முதலியோர் அச்சமின்றி அங்குவந்து அஞ்சி நடுங்கித் தேறித் துதித்துவணங்க, சிங்கப்பிரான் சீற்றந்தணிந்து தன் கையில் அபயமுத்திரையைக்காட்டியருள, அப்போதும் பயந்தெளியாத தேவர்கள் பெரியபிராட்டியாரை அச்சிங்கப்பிரானருகில் செல்லும்படி பிரார்த்தித்து அனுப்ப, தன்னருகில்வந்த அத்திருமகளை அருளொடு நோக்கிச் சினந்தணிந்த சிங்கப்பிரான் பரமபக்தமணியான பிரகலாதனைப் பேரன்போடு கடாக்ஷித்தருளி "உனது தந்தையை உனது முன்னிலையிலே யான் உடம்பைப் பிளந்தளைந்து கொல்லவும் மனந்தளராமல் என்னிடத்தே அன்பைச்செலுத்தியிருக்கின்ற உனக்கு யான் என்னவுதவி செய்வேன்!; உனக்குச்செய்யவேண்டிய உதவி ஏதேனுமுளதாயின் சங்கோசமின்றி விரைவிற் சொல்வாய்" என்று கூறியருள; அதற்குப் பிரகலாதன் 'திருமாலே! உனது திருவருளால் யான்பெற்ற நன்மைகளோ எல்லையிலாதன; இன்னமும் யான் பெறவேண்டிய நன்மை ஒன்றுளதோ? உளதாயின், யான் ஒரு புழுவின் சன்மத்தைப்பெற்றாலும் நின்பக்கல் பக்தி குன்றாதிருக்கப் பெறுதலே யான்வேண்டும் வரமாம்' என்று கூற, திருவுள்ளமிரங்கிய திருமால், 'அன்பர்தலைவ! பஞ்ச பூதங்களெல்லாமழிந்தாலும் அழியாமல் நீ என்னைப்போல எக்காலத்திலு முள்ளவனுவாய்; எக்காலத்தும் மாறாது வளரு மன்புடையையாவாய்' என்று வரமளித்து, தேவர்களை நோக்கிப் பிரகலாதனுக்கு முடிசூட்ட முயலுமாறு நியமித்து அந்தர்த்தானமடைந்தனன். தேவர்களும் அக்கட்டளையின்படியே முடிசூட்ட, பிரகலாதன் அரசர்கட்குமரசனுய் மூவுலகங்களையும் தன்வசத்திற்கொண்டு இனிது வாழ்ந்து வந்தனன். ... ... ... ... ... ... (*)

நரஸிம்ஹாவதாரசரிதம் முற்றிற்று.

# நல்வார்த்தை மணித்திரள்.

ஸ்ரீவசனபூஷண திவ்யசாஸ்த்ரத்தில் பொதிந்துள்ள நல்வார்த்தைகளில் இதுவொன்று மிகச் சிறந்தது;—

" குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும்
சிரிப்பும் உகப்பும் உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும் " என்பதாம்.

* ஆர் வசன பூடணத்தின் ஆழ்பொருளெல்லாமறிவார்? ஆரது சொல்நேரில் அனுட்டிப்பார்? * என்று மணவாளமாமுனிகள் அருளிச்செய்தவாறு இந்த நல்வார்த்தையின்படி அனுட்டிக்கவல்ல அதிகாரி இம்மண்ணுலகில் ஒருவருமிலரேயாலும் ஸ்ரீஸூக்தியின் பொருளை ஒருவாறு அறிந்திருத்தல் அழகியதன்றே. கேண்மின்;

நமக்குச் சிலர் குற்றம் செய்தால் அவர்கள் திறத்திலே நாம் பொறுமை காட்ட வேணும்; க்ருபை பண்ணவேணும்; சிரித்திருக்கவேணும்; உகந்திருக்கவேணும்; உபகார ஸ்ம்ருதியும் நடக்கவேணும்.

1. அவர்கள் செய்த குற்றத்திற்கு நாம் ஒருபதில் தீங்கு செய்யவாவது, இப்படி நமக்குக் குற்றஞ்செய்தானே! என்று நெஞ்சு கன்றியிருக்கவாவது கூடாது. இதுவே பொறுமையாகும்.

2. பாகவதாபராதிகளை எம்பெருமான் அவசியம் தண்டித்தே தீர்வனாதலால் 'ஐயோ! நாம் பொறுத்திருந்தாலும் இவர்களை எம்பெருமான் தகுந்தபடி தண்டிக்கப் போகிறானே! அந்தோ! இதற்கு என்ன பண்ணுவோம்!' என்று இரங்கியிருக்க வேணும். இதுவே க்ருபை பண்ணுவதாம்.

3. ஒருவர் நமக்குத் தீங்கிழைப்பதாவது என்ன? நம்மிடத்தில் பலபல குற்றங் குறைகள் இருப்பதாக எடுத்துக்கூறி நம்மை தூஷிப்பதாம். அங்ஙனம் தூஷிப்பதனால் நமக்கு என்ன ஹாநி விளைந்திடுமென்பதை நாம் சிறிது ஆலோசிக்கவேணும். இஹலோகத்தில் கெடுதி, பரலோகத்தில் கெடுதி என்று ஹாநியானது இருவகைப்படும். இவ்விரு வகைக் கெடுதிகளுள் பரலோகத்துக் கெடுதி யாதொன்றும் இவர்களால் விளைக்க முடியாதென்பது திண்ணம். இஹலோகக் கெடுதி ஏதேனும் விளைக்கமுடியும். அதாவது, யாரேனும் நமக்கு ஏதேனும் த்ரவ்யலாபம் உண்டுபண்ண நினைத்திருந்தால் அதை இவர்கள் தூஷணமுகத்தாலே தடைசெய்ய முடியும். அப்படிப்பட்ட இஹலோக விரோதங்களைச் செய்தால் உண்மையில் தொலையவேண்டியது தொலைந்தது என்று உள்ளம் பூரிக்கவேண்டுமேயல்லது இழவுக்கு வருந்தவேண்டிய அவசியமில்லாமையால், "ஐயோ! இவர்கள் செய்த கெடுதியை நாம் ஒரு ஹாநியாக நினைத்து நாமும் தங்களைப்போலே வருத்தப்படுவோமென்று இவர்கள் நினைத்திருக்கிறார்களே! இப்படியும் ஒரு மூடபுத்தி இவர்களுக்கு இருக்குமோ" என்று சிரித்திருக்கவேண்டும்.

4. நமக்குத் தீங்கிழைக்குமவர்கள் நம்முடைய தேஹத்திற்கு ஏதேனும் பரிபவம் பண்ணலாமேதவிர ஆத்மாவுக்கு ஒரு பரிபவமும் பண்ண முடியாதன்றே; அப்படி அவர்கள் பண்ணும் பரிபவங்களுக்கு இலக்கான ஸ்வசரீரத்தைத் தனக்கு சத்ருவாக நினைத்திருக்க வேண்டியவனாகையாலே தன்னுடைய சத்ருவிஷயமாக ஒருவன் பரிபவம் பண்ணும்போது தான் உகக்குமாபோலே உகந்திருக்கவேணும்; தவிரவும், இவர்கள் ஹானிபண்ணும் த்ருஷ்ட பதார்த்தங்கள் தனக்கு ப்ரதிகூலங்களென்று நினைத்திருக்கவேண்டியவனாகையாலே, தனக்கு ப்ரதிகூலங்களானவற்றைத் தவிர்க்கும்போது தான் உகக்குமாபோலே உகந்திருக்கவேணும்.

5. நம்முடைய தோஷங்களை நாம் அநவரதம் அநுஸந்தித்துக் கொண்டேயிருக்க வேணும். இப்படியிருந்தும் நாம் நம்முடைய தோஷங்களை மறந்திருக்கிறோம்; அப்படிப் பட்ட நிலைமையிலே அவற்றை நமக்கு நினைப்பூட்டி இவர்கள் நமக்குப் பண்ணு முபகாரம் என்னே! என்னே! என்று பெருநன்றி பாராட்டவேணும்.

இந்த ஐந்துக்குள்ளே ஏதேனும் ஒன்று வாய்த்தாலும் போதும். ஐந்தும் வாய்த்து விட்டால் மூவுலகும் வென்றதாம்.

# செய்தி.

## கள்ளக்குறிச்சி ஸ்ரீகோவிந்தராஜஸ்வாமி ஸம்ப்ரோக்ஷண மஹோத்ஸவம்.

சீராரும் செல்வத் திருக்கோவலூருக்கு மூன்று காத தூரத்திலுள்ள கள்ளக்குறிச்சியில் முன்னோர்களால் எழுந்தருளச் செய்யப்பட்ட ஸ்ரீபுண்டரீக வல்லீ ஸமேத ஸ்ரீ கோவிந்தராஜப் பெருமாளுக்கு மண்டப கோபுர, ப்ராகார த்வஜஸ்தம்பாதி திருப்பணிகளை அதி விமரிசையுடன் அழகாக பூர்த்தி செய்வித்த ஸ்ரீதரன் மோட்டார் பஸ் முதலாளி ஸ்ரீமான் V. கேசவலு நாயுடு அவர்கள் முயற்சியால் விலக்ஷண ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டியாக முப்பது திருநாமங்கள் எழுந்தருளியிருந்து வேதபாராயணமும், திவ்யப்ரபந்தமும் சிறப்பாக நடந்து ஸம்ப்ரோக்ஷணை ஜூலை மீ 12-ந்தேதி முதல் 16 தேதி வரை அழகாக நடந்தது.

பல விலக்ஷணமான திவ்ய தேசங்களிலிருந்து வைகானஸர்கள் எழுந்தருளி யாகங்கள் நடைபெற்றன. எல்லாவற்றையும் காட்டிலும் சிறப்புடையது திருக்கோவலூரிலிருந்து முப்பது மைலும் கடந்து ஆயனார் பரிவாரங்களுடன் ஸம்ப்ரோக்ஷணைக்கு எழுந்தருளி ஸ்தலத்துப் பெருமாள்களுடன் கலந்து ஸேவை ஸாதிப்பதல்லாமல் கள்ளக்குறிச்சியும் ஒரு திவ்ய தேசமாக அபிமானித்ததாகும்.

ஆண்டாளும், ஆழ்வார் பதின்மரும், சக்கரவர்த்தி திருமகனாரும், சுதர்சன, கருட, விஷ்வக்ஸேனாதிகளும் ப்ரதிஷ்டை கண்டருளினார்கள். விசேஷ திருமஞ்சனங்களும், பாராயணங்களுடன் திருவீதிப் புறப்பாடுகளும். திருக்கோவலூர் தீர்த்தகாரர் ஸ்ரீ எம்பெருமானார் ஜீயர் ஸ்வாமிகளும் பெருமாளுடன் எழுந்தருளி கோஷ்டியை அலங்கரித்தார்.

இவ்வைபவங்களை சிறப்புடன் தன் ஏகதேசமான பொறுப்பில் நடத்தி வைத்த ஸ்ரீமான் V. கேசவலு நாயுடு நீங்காத செல்வம் நிறைந்து உத்தரோத்தரமான பகவத்பாகவத கைங்கர்யங்களில் ஆழ்ந்து வாழ்வாராக.

தி. த. ஆராவமுதன்,
அட்வகேட் கள்ளக்குறிச்சி.



கள்ளக்குறிச்சியில் தில்லை கோவிந்தராஜன் ஸன்னிதி ஸம்ப்ரோக்ஷண ஸமயத்தில் (28-6-52)-ல் குழுமின ஸ்ரீவைஷ்ணவ கோஷ்டி.

# "நந்தநோத்ஸவ நினைவுகள்."

(Pandit P. R. Varadachariar, Madras 3.)

நிகழும் ஆடிமாதத்தில் வெளிவந்த ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையில் "நந்தநோத்ஸவ நினைவுகள்" என்னும் மகுடம் புனைந்த ஓர் வியாஸம் ஒன்றரைபக்கம் மாத்திரமே வெளி வந்திருக்கின்றது. இதனையெழுதின பெரியாருடைய திருநாமம் ஒன்றும் பத்ரிகையில் வெளியிடப்படாமலிருந்தாலும் ஸ்ரீ-உ-வே. சென்னை அட்வகேட் D. ராமஸ்வாமி ஐயங்கா ரவர்களே இது எழுதியிருக்கவேண்டுமென்று பலரும் ஏககண்டமாச்சொல்லுவது நமது காதில் விழுகிறது. நம்முடைய உள்ளமும் அப்படியே நம்புகிறது. உண்மையில் பரம பக்தமணியான அந்தமஹானைத் தவிர்த்து வேறு எவரும் இதை யெழுதியிருக்க முடியாது. தோஷைக தர்சிகளானவர்களும் ஒரு குறைகூறமுடியாதபடி வாக்யங்களை அமைத்திருக்கிற அழகும் ஒவ்வோரக்ஷரத்திலும் பக்திரஸம் ஒழுகுகின்ற ஆச்சரியமும் வாசாமகோசரம் என்ன லாமத்தனை. எத்தனை தடவை வாசித்தாலும் தெவிட்டாத அமுதமான வியாஸமன்றோ இது. அதிசயோக்தியில்லாதபடி சொல்லுகிறேன்—இருபது தடவை வாசித்தேனிந்த வியாஸத்தை. பத்து தடவை பிறர்க்கும் வாசித்துக்காட்டினேன். இவ்வளவிலும் த்ருப்தி யில்லையென்றே சொல்லுவேன். வாக்கியங்களின் அழகு ஒருபுறமிருக்க, நெஞ்சம் நிறைந்த பக்தி ததும்பியிருப்பதுதான் மிக வியக்கத்தக்கது.

இப்படிப்பட்ட சிறந்த வியாஸத்தை ஒன்றரைபக்கமே அச்சிட்டு (தொடரும்) என்று விட்டிருக்கிறார் பத்ராதிபர். வியாஸமெழுதியனுப்பினவர் இப்படி அரைகுறையாக ஒரு நாளும் எழுதியனுப்பியிருக்கமாட்டார். அவர் பூர்த்தியாகவே எழுதியனுப்பியிருப்பர். இந்த வியாஸத்தின் விஷயமென்னவென்றால், நேற்று வைகாசி மாதத்தில் நடந்த தேவப் பெருமாள் வைசாக ப்ரஹ்மோத்ஸவத்தின் நிகழ்ச்சிகளைத் தெரிவிப்பதே. இரண்டு திருநாட் களின் நிகழ்ச்சிதான் வெளிவந்திருக்கின்றது. பெரிய திருவடி மஹோத்ஸவ நிகழ்ச்சிகளை வெளியிட்டாவது நிறுத்தியிருக்கலாம். இப்படிப்பட்ட அருமை பெருமை வாய்ந்த வியாஸத்திற்கு இப்பத்ரிகையில் அவகாசம் அரிதாகிறது. காசுக்குமுதவாத வம்பு வியாஸங் களுக்கு அபரிமிதமான அவகாசம் கொடுக்கப்படுகிறது. "ஸ்ரீ-உ-ப. வித்வான் திருவரங்கம் திருமலை தாதாசார்யஸ்வாமி திருப்பதி." என்பவருடைய அசட்டு வியாஸங்களுக்குத்தான் இப்பத்ரிகையில் ஸஞ்சிகைதோறும் பரிபூர்ணமான அவகாசம்போலும். இதுவரை அந்த தாதாசாரியர் எழுதிய விஷயங்களில் ஒன்றாவது உயிருடனிருப்பதுண்டோ? ஒரு அக்ஷரங் கூட நிலைத்து நில்லாதபடி அத்தனையும் அடுத்த நாளிலேயே உருமாய்ந்துபோவதை உலக மெல்லாம் கண்டுவருகிறது. ந்ருஸிம்ஹப்ரியா பத்ராதிபர்க்கு இதையறிந்துகொள்ளவுமா சக்தியில்லை? இந்த ஜூலைமாதத்து ந்ருஸிம்ஹப்ரியாவில் வெளிவந்திருக்கிற (ப்ரகீர்ணகம்) என்கிற அவருடைய வியாஸத்திலுள்ள அஸம்பத்தங்கள் என்போல்வார்க்கே நன்கு தெரி கின்றனவென்றால் லௌகிக வைதிகங்களில் தேர்ச்சி பெற்றிருக்கிற பத்ராதிபர்க்குத் தெரி யாமலா இருக்கும்? இப்படியும் ஒரு வீணான அபிநிவேசம் விவேகிகளுக்குத் தகுமா? பிராட்டி யின் உபாயத்வமும் ப்ரபத்தியின் உபாயத்வமும் இந்ததாதாசார்யரால் ஸமர்த்திக்கப்படக் கூடிய நிலைமையில் இல்லையே. ஸாக்ஷாதுபாயத்வமில்லையென்றும் பரம்பரயாஉபாயத்வந் தானுள்ளதென்றும் ஆனாலும் உபாயமென்று வழங்கக்குறையில்லையென்றும் இப்போது எழுதுகிறாரிவர். இந்த பரமார்த்தத்தை ஒப்புக்கொள்ள இத்தனை காலமாயிற்று!

"ஆசார்யவிசிஷ்ட ஸ்ரீமந்நாராயண சரணௌ" என்ற மந்த்ராநுபூர்வி இராமையால் ஆசார்யனுக்குப் பிராட்டிக்குப்போல் உபாயத்வமில்லை; உள்ளதாகச்சொன்னது அபஹாஸ்யம்" என்றெழுதுகிறார். மந்த்ரத்தில் இவ்வாநுபூர்வி எதற்காக இருக்கவேண்டும்? ஆசார்யனுக்கு உபாயத்வம் ப்ரமாணங்களில் ப்ரதிபந்நமாயிருக்கின்றது. அதை மறைக்க முடியாது. அதற்கு எப்படி நிர்வாஹமோ அப்படித்தான் பிராட்டியின் உபாயத்வத்திற்கும் என்றால் இதற்கு இது உத்தரமாகுமோ?

இதற்குமேல் "வாதிவிஜயபரிசிஷ்டம்" என்று தொடங்கி யெழுதியுள்ள விஷயங்களத்தனையும் ஒரு நொடிப்பொழுதுகூட நிற்கமாட்டாதவை. வேதாந்ததரு இளமையில் வாதப்போர்கள் செய்ததுண்டென்றும் ப்ரதிஷ்டிதரான பிறகு அதை நெஞ்சாலும் நினைத்ததில்லையென்றும் பெரியார் எழுதியிருப்பது மிகவும் பொருத்தமானது. அவ்வாசிரியர்க்கு வாதப்போர் புரிவதில் ஸாமர்த்தியமில்லையென்றோ ஸபாபீருவென்றோ யாரும் சொல்லவில்லை. வாதப்போர் புரிந்து ஸித்தாந்த ஸ்தாபனம் செய்யாதவர் என்றும் யாரும் சொல்லவில்லை. அவருடைய ஒப்பற்ற வொரு பெருமைக்காகச் சொல்லப்பட்ட விஷயத்தை தாழ்வுக்காகச் சொல்லப்பட்டதாய் மருண்டு பல அபார்த்தங்களை யெழுதுவதில் யாது பயன்?

"ஸபாபுஜங்கீஸர்வஸ்வத்தில் தொண்ணூற்றாரும் சுலோகம் முதற்கொண்டு தெரிவிக்கப்பட்டிருக்கும் விஷயங்களுக்கு பதில் சொல்லவில்லையே" என்று எழுதப்பட்டிருக்கிறதாம். இதனால், அதற்குமுன்வரையிலுள்ள விஷயங்களுக்கு பதில்வந்துவிட்டதாய் அறிவித்ததாக ஆகிறதாம். இதற்காக நன்றி செலுத்துகிறாராமிவர். ஐயோ இந்த மூளையின் மாட்சிக்குக் கண்ணேச்சில்படாமலிருக்கவேணுமே. இப்படியாகச் சில பாமரர்களை மயக்கிக்கொண்டே இவர் காலம் கழிக்கிறார். ஒவ்வொரு விஷயத்திலும் உலகமறிய பங்கமேபடைந்துவருமிவர் இப்படித்தானே எழுதிக்கொண்டிருக்கவேண்டும். இதற்குமேலுள்ள ஒரு விநோதத்தையுங் காணுங்கள். இப்போது மஹாவ்யாபகர்களாயும் வாவதூகச்ரேஷ்டர்களாயு மெழுந்தருளியிருக்கின்ற மடாதிபதிகள் ஸ்வயம் வாதகோஷ்டிகளில் அந்வயிப்பது கிடையாதென்றும், இது ஸ்வாதிகார விருத்தம் என்கிற காரணத்தினாலேயே மஹாஸ்வாமிகளால் ஆத்யந்திகமாகப் பரித்யஜிக்கப்பட்டதென்றும் உண்மை வெளியிடப்பட்டிருந்தது. இதற்கு இப்போது இவர் எழுதுகிறார்—ஆவச்யகதை ஏற்பட்டால் தடையில்லாமல் வாதகோஷ்டிகளில் நேராக அந்வயித்தே தீருவர்கள் என்று. இது எப்படியிருக்கிறதென்றால், அவச்யமானால் ரைல்வண்டிகளிலுமேறுவர்கள், ஸர்விஸ் பஸ்ஸுகளிலுமேறுவர்கள், ஆகாச விமானங்களிலுமேறி ஆப்ரிகா, அமெரிகா எங்கும் செல்லுவர்கள்' என்னுமாபோலேயிராநின்றது. மடாதிபதிகளின் கையாலன்றோ இது எழுதப்படவேண்டும்.

இதற்குமேல் ஒன்று எழுதுகிறார்—"ஸந்நிஹித காலத்தில் கீர்த்திசேஷரான ப்ரதிவாதிபயங்கர மடாசிசராய் ஜகத்குருவாயிருந்த காதி அனந்தாசார்யஸ்வாமி காசி வித்வான்களுடன் வாதப்ரஸக்தி உண்டானபோது ம. ம. கபிஸ்தலம் தேசிகாசார்ஸ்வாமியை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு போய் வாதம் செய்வித்தார்." என்று. இது காசீ வ்ருத்தாந்தத்தை அடியோடு அறியாமலோ, அறிந்தும் உகைவஞ்சனையாகவோ எழுதிற்றத்தனை. காசீ விஷயம் நடைபெற்று 37 ஆண்டுகளுக்கு மேலானாலும் அவ்விடத்துச் செய்திகள் யாவும் பலபாஷைகளிலும் பிரசுரம் செய்யப்பட்டேயிருக்கிறது. வித்வான்களுக்கெல்லாம் உண்மை தெரியும். ஸாரமாக இங்கெழுதுகிறோம். ஸ்ரீகாதி அனந்தாசார்யஸ்வாமி காசியில் சில மாதங்கள் எழுந்தருளியிருந்து வெளியே புறப்படும் நாளில் அவ்வூரில் ருத்ரபட்டசர்மா என்கிற ஒரு வித்யார்த்தி ஸ்ரீவைஷ்ணவதர்சனத்தை தூஷித்து ஒரு சிறு பத்ரிகையச்சிட்டு

வெளியிட்டான், அவன் வித்யார்த்தியேயொழிய ப்ரதிஷ்டிதனான வித்வானல்லன் என்பதை ஸ்வாமி தெரிந்துகொள்ளாமல் "எத்தனை நாள் ஆனாலும் நாம் இங்கேயிருந்து ஸ்ரீவைஷ்ணவ தர்சனத்தின் மேன்மையை ஸ்தாபித்துவிட்டே வெளிக்கிளம்புவோம்" என்று பத்ரிகை யச்சிட்டுக் காசி முழுவதும் பிரசுரப்படுத்தி தம்முடைய ப்ரயாணத்தையும் நிறுத்தி இன்னும் இரண்டு மூன்றுமாதம் காசியிலேயே எழுந்தருளியிருக்கப்போகிறதாக சிஷ்யர்களுக்கெல்லாம் தெரிவித்துவிட்டார். அப்பத்திரிகையைக் கண்டகாசீ வித்வான்கள் பலர் உடனே ஸ்வாமியிடம் நேரில் ஓடிவந்து 'திடீரென்று எதற்காக இப்படியொரு பத்ரிகை வெளியிட்டீர்கள்? இங்கு ஒருவிதமான க்ஷோபத்திற்கும் ப்ரஸக்தியில்லையே! என்ன விஷயம்? என்ன விசேஷம்? என்று கேட்க; ஸ்வாமி ருத்ரபட்டசர்மா வெளியிட்டிருந்த தூஷண பத்ரிகையை எடுத்துக்காட்டினார். அந்த வித்வான்கள் அதைப்பார்த்து, 'ஸ்வாமிந்! இது ஒரு மூர்க்கவித்யார்த்தியின் செயல். ப்ரஸித்த வித்வான்களில் ஒருவர்கூட இதில் அந்வயித்தவர்களல்லர். அந்த மாணாக்கனுக்காக ஸ்வாமிகள் இவ்வளவு ஸம்ப்ரமம் கொள்வது அழகல்ல' என்றார்கள். ஆனாலும் ஸ்வாமி இதன் உண்மையைப் பரீக்ஷிக்கவேணுமென்று சில நாட்கள் அங்கே தங்கியிருந்தார். அந்த ருத்ரபட்ட சர்மா சில வித்வான்களைத் துணைகொண்டு ஸ்ரீபாஷ்யத்தை தூஷித்து ஒரு புத்தகம் மூன்று நாளில் வெளியிட்டான். ஸ்வாமி ஸந்நிதியில் அப்போது ஆஸ்தான வித்வான்கள் நால்வர் இருந்தபடியால் அவர்கள் 'துர்வாத விதூநநம்' என்கிற பெரிய பதில் புத்தகமெழுதி ஒருவாரத்திற்குள் வெளியிட்டார்கள். அவ்வளவோடு எதிரிகளின் கோலாஹலம் சாந்தமாய்விட்டது. அந்த ப்ராந்தத்தில் பல விடங்களில் ஸ்வாமி சிஷ்யர்கள் மஹாதனிகர்களாய் அநேகர் இருப்பதால் அவர்களெல்லாரும் காசியில் பிரபலமான வாதப்போர் நடக்கிறதென்று கேட்டுத் திரண்டு வந்துவிட்டார்கள். லக்ஷக் கணக்கான ரூபாய்களை ஸ்வாமி ஸந்நிதியில் ஸமர்ப்பித்து இந்த விவாதத்தை லேசாகவிட்டு விடாமல் கனக்கச் செய்து முடிக்கவேணுமென்று கேட்டுக்கொண்டார்கள். அப்போது ஸ்வாமி தென்னாட்டிலுள்ள ஸ்ரீவைஷ்ணவ வித்வான்களையெல்லாம் வரவழைத்து ஒரு ஸம்மேளனம் நடத்தி இவர்களை மகிழ்விப்போமென்று கருதித் தென்னாட்டிலும் ஆந்திர தேசங்களிலுமுள்ள வித்வான்களுக்கெல்லாம் ஆஹ்வான பத்ரிகை அனுப்பியருளினார். வானமாமலை முதற்கொண்டு விஜயநகரம் வரையிலுள்ள வித்வான்கள் பலர் (37 வித்வான்களென்று கணக்குத் தெரியவருகிறது) காசிக்குப்போயிருந்து ஐந்துநாள் ஸதஸ்ஸில் அவரவர்கள் நம் தர்சநார்த்தங்களை உபந்யாஸரூபமாக வர்ஷித்துவிட்டு மிகச் சிறந்த ஸத்காரங்களைப் பெற்றுக்கொண்டு திரும்பினார்கள். ஸ்ரீகபிஸ்தலம் ஸ்வாமி இவர்களில் தலைவராயிருந்தவர். அங்கு வாதயுத்தமென்பது சிறிதும் நடைபெறவில்லை. உபந்யாஸங்களே நடந்து முடிந்தது. வாதப்போர் நடந்தாலும் இவர்கள் பின்வாங்குகிறவர்களல்லர்; முன்னிற்கக் கூடியவர்களே. அதற்கும் துணிந்தே சென்றவர்கள். ஆனால் ஸித்தாந்த ஸ்தாபனத்தைப் புருஷார்த்தமாகக்கொண்டு சென்றவர்களல்லர்; தேசாவலோகந ஸம்பாவநாதிகளைக் கணிசித்துச் சென்றவர்கள். இவர்களுக்கும் வேதாந்த குருவுக்கும் அஜகஜாந்தரமுண்டு. தாதாசார்யரால் எதற்காக இது எழுதப்பட்டதோ தெரியவில்லை. எதற்காக?—பங்கப்படுவதற்காக.

இதற்குமேல் மாபாஷ்யம் என்று தொடங்கி எழுதியிருப்பதும் அஸம்பத்த புஞ்ஜம். "வாதாசனவராரிவரென" என்கிற அந்தப் பாட்டு யாப்பிலக்கணம் பயிலாத அரைகுறைத் தமிழனொருவனால் இயற்றப்பட்டதென்பது இங்கு முக்கிய விஷயம். இதைப்பற்றி ஒருவராகிலும் பதில்சொல்லப் புறப்பட்டதுண்டோ? சீர்கள் அமையவேண்டிய ரீதி என்ன? எப்படி இப்பாட்டு அமைந்திருக்கிறது? எவ்விதமானகுறை சொல்லப்படுகிறது? என்று தெரிந்து

கொள்ள சக்தியுடையவர்களன்றோ அதற்கு பதில்சொல்லப் புறப்பட முடியும். அதை விட்டு வீண்வம்புப்ரஸங்கங்களிலே தலைநிற்கிறார் தாதாசாரியர். மாபாஷ்யமென்பதற்கு ப்ரபலமான ரூடிசக்தியினால் மஹாபாஷ்யந்தான் பொருளென்று வாதாடுமிவரைப்பற்றிச் சிரிப்பதா அழுவதா? மஹாபாஷ்யம் என்கிற ஸம்ஸ்க்ருத பதம் இங்கில்லை. 'மாபாஷ்யம் என்கிற தமிழ்ப்பதமேயுள்ளது. மஹா வ்ருக்ஷமென்கிற ஸம்ஸ்க்ருதபதம் ரூடிசக்தியால் கள்ளிச் செடியைச் சொல்லுமானால் மாமரம் என்கிற தமிழ்ச்சொல்லும் அந்த ரூடிசக்தியைத் தாங்கி நிற்குமோ? மஹா என்பதுதானே மா என்றாயிற்று; வ்ருக்ஷமென்பதுதானே மரமென்று நிற்கிறது; ஆகவே மாமரமென்பதும் மஹா வ்ருக்ஷமென்பதும் ரூடிசக்தியால் கள்ளிச் செடியையே சொல்லுமென்பார்க்குத் தம்பியா தமையனா இவர்? ஸம்ப்ரதாயத்தில் மாநகர் என்பதற்கு யோகரூடி சக்தியால் திருப்பதியேபொருள். அப்படியிருந்தும் ஒருவர்: "மாநகரில் மாறன் மறைவாழ" என்று வாய்வந்தபடி பேசிவைத்தார். அதிலுள்ள அநுபவத்தினையறியாமல் இவர்களும் கோஷித்துக்கொண்டிருக்கிறார்கள். ஸ்ரீவைஷ்ணவாசார்ய புருஷர்களின் வாழித்திருநாமங்களில் ஸ்ரீ பாஷ்யத்தை நியமேந மாபாஷ்யமென்றே சொல்லிவருகிறார்கள். மா என்கிற சொல் (மஹா) என்கிற சொல்லின் திரிபேயானாலும் ரூடி சக்தியென்று வாதிக்கவேண்டுமானால்(மஹா) என்கிற சொல் அப்படியே யிருந்து தீரவேண்டும். அப்படியில்லாமல் மாபாஷ்ய மென்றுள்ளவிடத்தில் ரூடிசக்தியென்று வாதிப்பது படித்தவர் பணியன்று.

இதற்குமேல் வாக்யம் என்றொரு மகுடமிட்டு எழுதியிருப்பது அஸம்பந்தங்களில் தலைநிற்குமது. 'பதஸமூஹோ வாக்யம்' என்பர் சாஸ்த்ரஜ்ஞர். இதையிட்டே "மாசுச: என்கிற வாக்கியத்தில்" என்று வேதாந்த குரு பலகாலும் எழுதினார். மாசுச: என்றவிடத்தில் த்வம் என்பது அவச்யம் அத்யாஹார்த்தவ்யமாகையாலே கர்த்தாவும் க்ரியையும் கூடினதாகி அது வாக்யமாகலாம் என்னில்; மச்ச என்கிற ஒருபதமும் வாக்யமாகலாம். இங்கும் த்வம்பதம் வந்தே நிற்குமன்றோ. இஷ்டாபத்தியென்னில் அது இங்கும் துல்யம். ஸமீபகாலத்தில் அஹோபிலமடத்தின் மூலமாக ஈட்டின் விமர்சமென்றொரு சிறுபுத்தகம் வெளிவந்திருக்கிறதே. அதில் (பக்கம் 7. வரி 18ல்) "வாசியற என்கிற வாக்யம் பேதமில்லாமல் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது" என்று எழுதப்பட்டிருக்கிறது. எழுதினவர் மடவித்வான்களில் தலைவர். 'வாசியற' என்பதை வாக்யமென்று எப்படி யெழுதினீரென்று அவரோடே வாதப்போர் புரிவதுதான் ந்ருஸிம்ஹப்ரியாவுக்கு அவச்யமானது. நாலடியை எட்டடியாக மருண்டு பரிபவப்பட்டு நிற்கிறவர்க்கு இவர் கைகொடுக்கவருவது மிகவும் அநுரூபமே.

இப்படி தொட்ட தொட்ட விடங்கள்தோறும் அஸம்பத்த ப்ரலாபமேயான அபஹாஸ்ய வ்யாஸங்களுக்கு அநவதிகமான அவகாசம் கொடுக்கிற பத்ரிகை அருமருந்தன்ன வியாஸங்களுக்கு அவகாசம் கொடாமல் அவற்றை அரைகுறையாகப் பிரசுரம் செய்வது யுக்தமாகாது. "நம் மாப்பிள்ளைக்கு முப்பத்திரண்டு குணங்களில் முப்பது குணங்கள் புஷ்கலங்கள்; இரண்டுதான் குறை. தனக்கும் தெரியாது, சொன்னாலும் கேட்கமாட்டார்" என்கிற கதையிலேயே இவர்கள் பழகிவருவது இவர்கட்கே தகும்.

---



ஸ்ரீ வில்லிபுத்தூர். ரங்கமன்னர்.



ஸ்ரீ வில்லிபுத்தூர். ஆண்டாள்.



ஆண்டாள் பின்சேவை (முன்னிலும் பின்னழகிய பிராட்டி



ஸ்ரீ வில்லிபுத்தூர். ஆண்டாள்.

ஸ்ரீ

# ஸத்யவாதி ஸமாச்வாஸம்

(தி. கோ. ஸ்ரீநிவாஸாசார்யர். வியாகரண சிரோமணி. ஸ்ரீபெரும்பூதூர்.)

विलिखति ननु कोऽपि सत्यवादीत्यपलपितस्वकनामधेयतत्त्वः ।
यदलिखदभिवञ्चयन् मितज्ञान् तदिदमहो विमृशाम्यभिज्ञतृप्त्यै ॥

சென்ற மாதத்தில் அடியேன் எழுதிய ஈட்டுவிமர்ச பராமர்சமென்கிற வியாஸம் ஸ்ரீரங்கம் அழகிய மணவாளன் பத்திரிகையில் பிரசுரமாகி வெளிவந்ததைக் கண்ட பண்டிதர்கள் பலரும் திருவுள்ளமுகந்து திருமுகங்கள் விடுத்திருக்கிறார்கள். சந்த்ரப்ர காசமோ ஸூர்யப்ரகாசமோ எல்லார்க்கும் ஏகரீதியாய் ஸந்தோஷாவஹமாக இருக்க மாட்டாதே. அதுபோல எந்த வியாஸமும் எல்லார்க்கும் ஒரே விதமாய் ஸந்தோஷ கரமாயிருக்க முடியாதாதலால், அனேக வித்வான்களுக்குப் பரமானந்த ஸந்தோஹ ஸந்தாயகமான அடியேனுடைய அந்த வியாஸம் சிலர்க்கு ஸங்கடத்தை விளைத்ததென் பதில் வியப்பொன்றுமில்லை. அப்படி ஸங்கடமடைந்தவர்கள் அடியேனுடைய வியா ஸத்திலுள்ள விஷயங்களை ந்யாயமான முறையிலே ஆராய்ந்து ப்ரமாண யுக்திகளைக் கொண்டு கண்டித்தால் அது பண்டித க்ருத்யமாகப் புலப்படும். அவ்விதமாக ஆராய்வ தற்கு சக்தியில்லாமையாலே ஆசை தீர வசவுகளைப்பொழிந்து தீர்த்துவிட வேண்டிய தென்று தீக்ஷைகொண்ட மடத்தார்கள் "பராமர்ச ஸாரப்ரகாசனம்" என்று பெயர் கொண்டவொரு காகிதத்தை அச்சுக்கூடத்தின் பெயர்கூட இல்லாமலும், இன்னார் வெளியிட்டது என்பது மில்லாமலும் (ஓர்ஸத்யவாதி) என்று கையொப்பமிட்டுப் பிரசுரஞ் செய்திருக்கிறார்கள். அச்சுக்கூடத்தையுமா ஒளிக்கவேணும்!

அக்காகிதம் திருவள்ளூர் தபால் முத்திரையோடு எமக்கும் மற்றும் பலர்க்கும் கிடைத்திருப்பதனாலும் முத்ரண ப்ரகார பரிசீலனாதிகளாலும் இது அச்சிடப்பட்ட இடமும் இதையெழுதினவர் இன்னாரென்பதும் எளிதாகவே உலகமறியக்கூடியது. ருஜுவான வழியில் வெளிவந்து செவ்வனே நின்று பேச ஆற்றலில்லாதவர்கள் இப்படிப்பட்ட விஷமச்செயல்கள் செய்து தானே ஒருவாறு த்ருப்தியடைய வேண்டும். "விஷயத்திற்கு நாங்கள் பதில் எழுதப்போகிறதேயில்லை" என்று ஸ்பஷ்டமாகவே எழுதி முடித்துவிட்டார்கள் இக்காகிதத்தில். இப்படிப்பட்டவர்கள் நமது பராமர்ச க்ரந்தத்தைப் பாராதவர்கள் போலவே காட்டிக்கொண்டு வாளாவிருந்திட்டால் எவ் வளவோ கௌரவமாக இருக்கும். விஷய விசாரத்தில் தோல்வியடைந்துவிட்டபடியால் வாளாவிருக்க முடியாதன்றோ. * शोकक्षोभे च हृदयं प्रलापैरेव धार्यते யாகையாலே ப்ரலாபங் களைப் பண்ணி தரிக்கப்பார்த்தபடி நன்றே.

பராமர்ச க்ரந்தத்தை யெழுதிய அடியேனிருக்க, அடியேனைவிட்டு ஸ்ரீ அண்ணங் கராசாரிய ஸ்வாமியைப் பிடித்திழுத்து வாயார வைகிறார்கள். இதற்கொரு காரணம் சொல்லவேண்டுமே, காரணமும் கூறியிருக்கிறார்கள். என்னுடைய க்ரந்தாரம்பத்தில் * ஸ்ரீமதண்ணங்கராசார்ய மஹாவித்வதநுக்ரஹாத் * என்றெழுதி யிருக்கிறேனுகையால் இதையே த்வாரமாகக் கொண்டு நிந்தைகளைச் சரமாரி பொழிகிறார்கள். விரல் நுழைக்க இடம் கிடைத்தால் போதுமே தலையை நுழைக்க. மடத்து சிஷ்யரொருவர் * அஹோ பிலயதீந்த்ராணும் அபிவாத்ய பதாம்புஜே * என்று ச்லோகமியற்றி ஒரு கிரந்த மெழுதி னால், அந்த க்ரந்தத்தின்மீது வாய்திறக்க வழியில்லாதவர்கள் அஹோபிலயதீந்த்ரரைப் பற்றிக்கொண்டு வாக்பாணவர்ஷம் செய்யவேண்டும் போலும். இவர்கள் கைப்பற்று கிற (அல்லது) காட்டிக்கொடுக்கிற மார்க்கம் எவ்வளவு அழகாயிருக்கிறதென்று ப்ராமாணிகாகள் பார்க்கவேணும்.

புத்தங்கோட்டம் ஸ்வாமி ஈட்டின் விமர்சமென்று எழுதினர். உண்மையில் அது அந்தஸ்வாமி யெழுதினதல்லவென்றும் அவர் பெயரையிட்டுச் சிலர் செய்த கூத்தென்றும் அந்தஸ்வாமியின் வாயிலாகவே ஒரு வதந்தி உலவுகின்றது. "அந்திமதசையிலே எனக்கு இப்படியொரு பரிபவம் நேரவேணுமென்று உங்களுக்கு ஆசையா?" என்று அந்தஸ்வாமி அந்த ஈட்டின் விமர்ச ப்ரகாசகர்களுக்கு எழுதிக்கொண்டாராம். அடியேனுக்கு நேராகத் தெரியாத இவ்விஷயத்தில் வாக்ப்ரபஞ்சத்தை நிறுத்திக்கொள்ளுகிறேன். அந்த புத்தங்கோட்டம்ஸ்வாமியை அடியேன் வாசாமகோசரமாக எனது நூலில் நிந்தித்திருப்பதாக வைத்து இவர்கள் ஜகதாசார்ய தூஷணம் செய்ய இழிந்திருக்கிறார்கள். இவர்கள் மறுபடியும் வாயைக் கையைத் திறக்க முடியாதபடி விஷயங்களை அப்ரத்ருஷ்யமாக எழுதிவிட்டால் அதை இவர்கள் நிந்தையாக ப்ரசாரம் செய்வது வழக்கம். அன்று தொட்டு இதுவே இவர்களுடைய இயல்வு. ஈட்டுப்பங்க்திகளுக்கு அடியோடு அர்த்தம் தெரிந்துகொள்ளாமலும், ஸ்வபக்ஷமின்னது பரபக்ஷமின்னது என்று கூட அறிந்து கொள்ளாமலும் அவத்யஜடிலமாக எழுதப்பட்டிருந்த ஈட்டின்விமர்சத்திற்கு உண்மையில் பிராமாணிகர்கள் எழுதவேண்டிய பதில் எப்படிப்பட்டதோ, அப்படிப்பட்டதே அடியேனால் எழுதி வெளியிடப்பட்டிருக்கிறது. விஷய விசாரத்தில் ப்ராப்தமாகிற வார்த்தைகள் அவர்ஜநீயங்களே யென்பது கிராந்திகர்களுக்குத் தெரியும். விஷய சர்ச்சையில் த்ருஷ்டியுள்ளவர்கள் அந்த வார்த்தைகளில் சிறிதும் கண்செலுத்தார்கள. * गिरयो वर्षधाराभिः हन्यमाना न विव्यथुः *

"ஈட்டுவிமர்ச பராமர்சத்திற்கு ஏன் நீங்கள் பதில் எழுதவில்லை? என்று இவர்களைக் கேட்பர்களே, அவர்களுக்கு ஒரு பதில் சொல்லியாக வேண்டுமே; "அதில் அதிமாத்ரம் நிந்தைகளையே செய்திருப்பதால் நாமும் நிந்தைகளையே பொழிந்து, ஒன்றுக்குப் பத்தாகவும் நிந்தித்து க்ருதக்ருத்யர்களாய்விட்டோம்" என்று பதில் சொல்லிப் பிழைக்கும் வழியை இவர்கள் நன்று கண்டார்கள். விவேகிகள் இந்த சூதைத் தெரிந்துகொள்ளாமற் போகார்கள். புத்தங்கோட்டம் ஸ்வாமியைப் பற்றி வ்யக்திகதமாக ஒரு நிந்தாக்ஷரமும் கிடையாது நமது நூலில். இருந்தால் எடுத்துக் காட்டலாம். எனது பராமர்சத்தில் (பக்கம் 27-ல்) "இப்பண்டிதர் உபந்யாஸமென்றிட்டுப் பேசுகிறகாலங்களில் தலைகாலில்லாமல் எதையோ தொடங்கி எதையோமுடிப்பரென்று இவரோடொத்த வித்வான்கள் விளம்புவதுண்டு, அது இப்புத்தகத்தினால் நன்கு ப்ரதிஷ்டிதமாகிறது" என்று அடியேன் எழுதியிருப்பதுண்டு. இது நிந்தையன்று, யதார்த்த கீர்த்தனம். எப்படி யென்னில், ஈடு முழுவதும் தமக்கு ஸாதகமென்று ஸாதிக்கத் தொடங்கினவிவர் "ஈடு பாஷ்யகாருடைய நிர்வாஹத்திற்கும் ஆளுயிரப்படிக்கும் ஸ்வோக்திக்கும் விருத்தமாக இருக்கிறது" என்றும் இடையில் எழுதினார். இது இவர் எழுதத் தக்கதுதானாவென்று பாருங்கள். இது *அந்யதுபக்ராந்தம் அந்யதாபதித மென்பதில் சேர்ந்ததல்லவா? இவ்விடத்திற்குச் சேர எழுத வேண்டியதையே அடியேன் எழுதியிருக்கின்றேன். புத்தங்கோட்டம் ஸ்வாமியை அடியேன் இதுகாறும் நேரில் ஸேவித்தவனல்லேன். அவர் கறுப்பா சிவப்பா என்பதுமறியேன். அவருடைய உபந்யாஸங்களைக் கேட்டவர்கள் ஸ்ரீபெரும்பூதூர்கலாசாலையில் அடிக்கடி பேசிக்கொள்வது காதில் விழுந்திருந்ததத்தனை; அது ஸமுசிதஸமயத்தில் ஸ்ம்ருதி விஷயமானதால் ஸ்தானே எழுதப்பட்டது. இதை நிந்தையாக நினைப்பதானால் தகுந்தவழியில் இதைப் பரிஹரித்துக்கொள்ளவேண்டும். 'ஈட்டில்விருத்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறதென்று அவர் எழுதினது தவறுதான்' என்றோ, 'அதற்கு அப்படி யபிப்ராயமில்லை, இப்படியபிப்ராயம்' என்றோ ஸமாதானமெழுதியாக வேண்டும். "நாங்கள் ஸமாதானமெழுதப்போகிறதில்லை" என்று கைகூப்பி விட்டு வீணான வார்த்தைகளேதுக்கு?

இப்போது இவர்கள் ஸ்ரீஸ்வாமியின்மீது எழுதியுள்ள நிந்தைகளைச் சிறிது விமர்சிப்போம். "உலகமெல்லாம் போற்றுகிற தேசிகனையும் அவருடைய ஸூக்திகளையும் இவரொருவர்தானே பலபடியாக தூஷித்து க்ரந்தங்களெழுதினது" என்பது ஒரு

நிந்தை. இதற்கு விஜ்ஞாபிக்கிறேன். இப்படியெழுதுகிறவிவர்களுக்கு நவீனர்கள் என்று விருதுசாத்தி இவர்களுக்கும் தேசிகருக்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லையென்று அப்ர கம்ப்யமாக நிரூபித்து, அவருடைய க்ரந்தங்களுக்கும் இவர்களுடைய உக்தி சர்யை களுக்கும் ஒரு பொருத்தமுமில்லையென்று சதசஸ் ஸஹஸ்ரசச்ச ப்ரதிஷ்டாபனம் செய்த தருள்பவர் ஸ்ரீஸ்வாமி யொருவரே தான். இதைத்தான் இவர்கள் தேசிக தூஷண மாகக் கூறிக்கொண்டு திரிவது. ஸ்ரீஸ்வாமி ஸூக்திகளில் வேறு என்ன காட்டமுடியு மிவர்களால்?

> கடல்சூழ்ந்த இம்மண்ணுலகில் தேசிக திவ்ய க்ரந்தங்களை யெல்லாம் மாலை மாலையாகப் பதிப்பித்து ஆசந்த்ரார்க்க ஸ்தாயியாக நிறுத்திவைத்திருப்பவர் ஸ்ரீஸ்வாமி யோருவர் தவிர இந்த நவீனர்களில் யாரேனு மோருவருண்டோ?

என்று கேட்டால் * नाहं नाहं न चाहं न च भवति पुनस्तादृशो मादृशेषु— நாஹம் நாஹம் நசாஹம் நச பவதி புநஸ் தாத்ருசோ மாத்ருசேஷு* என்னவேண்டியவர்களன்றோ இவர்கள். தேசிக ஸூக்திகளுக்கு அற்புதமான வியாக்கியானங்களை ஸாதித்துக் கொண்டும், தேசிகர் விஷயத்தில் ஆச்சரியமான ஸ்துதியை இயற்றிக்கொண்டும், தேசிக க்ரந்தங்களை ஸர்வதோ முகமாக ப்ரசாரம் செய்துகொண்டும் வருபவர் ஸ்ரீஸ்வாமி யொருவரே தான். வேறு நபர் நபூதோ நபவிஷ்யதியென்று ஸ்ரீமத் ஏ. வி. கோபாலாசார்யஸ்வாமி போன்ற ப்ராமாணிகப்ராஜ்ஞ பரிப்ருடர்கள் திசை தொறும் புகழா நிற்க, இவர்கள் தாங்கள்படும் பரிபவமாற்றகில்லாமல் இப்படி ஆக்ரந்தனம் செய்வதும் யுக்தந்தானே.

'எங்களுக்கும் தேசிகருக்கும் உண்மையில் ஸம்பந்தமுண்டு' என்றோ, 'நாங்கள் அன்று தொட்டு இன்று வரையில் பரம்பரையாகவே தேசிகரை வழிபட்டு வருபவர் களே' என்றோ இந்த நவீனர்களால் ஒருநாளும் எள்ளளவும் நிரூபிக்கமுடியாதென்பது கல்வெட்டு. இவ்விரண்டு விஷயங்களையும் இவர்கள் பரநிந்தாகந்தமில்லாமல் ஸஹ்ரு தய ஹ்ருதயங்கமமாக நிரூபித்துவிட்டால், பின்னை எவ்வளவுமெழுதலாம். அதற்கு வழியில்லாமையாலே ஸ்ரீஸ்வாமியை தேசிக தூஷகரென்று தூஷிக்கவேண்டியதே இவர்களுக்குக் கடமையாயிற்று. "ஸ்ரீஸ்வாமியின் க்ரந்தங்களில் தூஷணை தவிர வேறு என்ன இருக்கிறது" என்று கூறுமிவர்கள், ரஹஸ்ய த்ரயஸாரத்தில் *த்ருடபூர்வ ச்ருதோ மூர்க்கோ தர்மாணுமவிசாரதஃ, வ்ருத்தாந் அப்ருச்சந் ஸந்தேஹாந் அந்தஃச்வப்ரமிவர்ச் சதி; அந்யதா மந்தபுத்தீநாம் ப்ரதிபாதி துராத்மநாம், குதர்க்கவ்யாளதஷ்டாநாம் விப்ராந்தேந் த்ரியவாஜிநாம்......இதி மந்தைரிதம் ப்ரோக்தம்...... *இத்யாதி தூஷணைகள் தவிர வேறு என்ன இருக்கிறது! என்று கூறுமவர்களை உகந்துகொள்ளவே ப்ராப்தமாகும். *வெள்ளைப் பரிமுகர்தேசிகராய் விரகாலடியோ முள்ளத்தெழுதியது ஓலையிலிட்டனம்* என்கிறூரே; மேலே குறித்த *த்ருடபூர்வச்ருதோ மூர்க்கஃ* இத்யாதிகளைத்தான் வெள்ளைப் பரிமுகர் உள்ளத்தெழுதினூரோ? என்று கேட்பவர்களுக்கும் இவர்கள் பதில்சொல்லித் தீரவேண்டும். "ஸ்ரீமத்......மஹாவித்வதநுக்ரஹாத்* என்றெழுதிய அடியேனைக்குறித்து இவர்கள் கேட்டிருக்கிற கேள்விக்கு அதுவே விடையாகும்.

மற்றொன்றும் எழுதுகிறூர்கள் — ஸ்ரீ ஸ்வாமியைப்பற்றி அனேக பண்டிதர்கள் நூற்றுக்கணக்காக கிரந்தங்களை விஸ்தாரமாக எழுதி அச்சிட்டு வெளியிட்டிருக்கிறூர்க ளாம்; இதுவரையில் எந்த வித்வானைக் குறித்தும் இவ்வளவு க்ரந்தங்கள் தோன்றின தில்லையாம்; ஸ்ரீ அண்ணங்கராசார்ய ஸ்வாமியைப்பற்றியே உலகில் ஒருவர் தப்பாமல் க்ரந்தங்களை யெழுதிக்கொண்டிருக்கிறூர்களாம். இவரைப்பற்றின தியானமே ஒவ் வொரு பண்டிதர்க்கும் ஸதா இருக்கிறதாம். ஆரியர்காள்! இது யதார்த்தமான வார்த் தையே. இதற்கு யாரேனும் மறுப்புரைப்பாருண்டோ? ராக்ஷஸர்கள் ஸ்ரீ ராமாவதா ரத்தில் மடிந்ததுபோல் வேறு எந்த அவதாரத்திலாவது மடிந்தார்களா? என்றும், *சதுர்தச ஸஹஸ்ராணி ரக்ஷஸாம் பீமகர்மணும், ஏகச் ச ராமோ தர்மாத்மா! என்னும்படி

யான ஸம்பவம் வேறு எந்த அவதாரத்திலாவது ஏற்பட்டதோ வென்றும், இளம்பருவமே தொடங்கி எழும் பூண்டெல்லாம் அசுரப்பூண்டாகவே தோன்றி* தேனுகன் பிலம்பன் காளியனென்னும் தீப்பப் பூடுகளடங்க வுழக்கி* என்னும்படி அத்தனையும் மாய்ந்தொழிந்தது க்ருஷ்ணாவதாரத்தில் தவிர வேறு எந்த அவதாரத்திலாவது உண்டோ? என்றும் கேட்டால், உண்டு என்று யாரே சொல்லவல்லார்? இல்லையென்றுதானே சொல்ல வேண்டும். அப்படியே இங்கும் ஆமாம் ஆமாம் என்றே தலையாட்டத் தட்டில்லை. யதார்த்த கீர்த்தனமே இது. இதில் ஸத்யவாதியே.

மற்றொன்றும் எழுதுகிறார்கள் — பிராமணர்கள் மாத்திரமன்றிக்கே நான்காம் வருணத்தவர்களான தமிழ்ப்பண்டிதர்களுங்கூட "வினைத்தொகை பீடித்தது" இத்யாதிகளை யெழுதி வெளியிட்டு யதாசக்தி கிஞ்சித்கரித்து ஸத்தை பெற்றிருக்கிறார்கள் — என்று. அவையெல்லாம் அடுத்தடுத்த நிமிஷங்களிலேயே தீயினில் தூசாகியிருக்கின்றன வென்பதை உலகமறியும்; இவர்களுள்ளமுமறியும்.* வரதநு ஹதிம் வாலித்ரோஹம் மஹாகபஸர்ப்பணம்* என்று தேசிகர் கணக்கிடுகிற கணக்கிலே இவர்களும் கணக்கிட்டுக்கொண்டிருக்க வேண்டியது இவர்களுக்குத் தலைவிதியாயன்றோவுள்ளது. ஒரு ஆசார்ய புருஷர் பல்லக்கிலேறிக்கொண்டு வாசலில் விருதுகளுடன் சென்றாராம்; அப்போது தேசிகர் க்ரந்தாவலோகனத்தில் ஊற்றத்தாலே அதை கவனியாமல் எழுந்து மரியாதை செய்யாமல் இருந்து விட்டாராம். அதற்காக அவ்வாசார்ய புருஷருடைய சிஷ்யர்கள் உள்ளே ஓடிவந்து தேசிகரைக் காலைப்பிடித்து சரேலென்றிழுத்துத் தெருவில் தள்ளி அவமதித்துச் சென்றார்களாம். இப்படிப் பல கதைகளைப் பெருமையாக எழுதிவைத்துக்கொண்டிருக்கு மிவர்கள் இப்பெருமை அவரொருவர்க்கே அஸாதாரணமா யிருக்கவேணுமென்று கருதுகின்றார்களோ? *ஹந்த ஹந்த ராமக்ருஷ்ண தூஷணபிதாயிநாம் கிம் ந சித்ர மத்ர சைத்யராவணாநுஸாரிணாம்* என்று ச்லோகங் கட்டியும் கோஷிக்கிறார்கள். ராவண சிசுபாலஸஹோதரர்கள் தேசிகரை வாசாமகோசரமாக தூஷித்துக்கொண்டிருந்ததாகவும் அதில் ஆச்சரியமொன்றுமில்லையென்றும் தேறியிருக்கின்ற இவர்கள், இக்காலத்திலும் அந்த சைத்யராவணாநுஸாரிகளான மஹாத்மாக்களே தோன்றி ஸ்ரீ ஸ்வாமியையும் தூஷித்துவருவதாகத் தேறமாட்டாமை என்னோ? தூஷிக்கப்படவேண்டிய உரிமை தேசிகருக்குமாத்திரமே யுள்ளது, மற்றவர்க்குக் கிடையாது என்று இவர்கள் கருதுகின்றார்களா? இதை இவர்கள் விளக்கியேயாகவேண்டும். பழங்கள் அபரிமிதமாகப் பழுத்துத் தொங்கும் மாமரங்களிலே கல்லடியும் தடியடியும் விழுகின்றனவென்றால் இதில் என்ன ஆச்சரியம்? என்ன ஸந்தோஷம்? பகவத் ராமாநுஜரை தூஷிக்கின்ற சிலர் "இவர் மிகவும் அயோக்கியரென்று தெரிந்துதான அக்காலத்திலேயே இவரை மகான்கள் விஷமிட்டு முடிக்கப் பார்த்தார்கள்; கங்கையிலே கொண்டு தள்ளியுமன்றோ முடிக்கப் பார்த்தார்கள்!" என்று கூறுவதை நாளைக்கும் கேட்டுவருகிறோமே. ஆழ்வானை தூஷிப்பவர்களும் "இவருடைய அயோக்யதையைக் கண்டுதானே கண்ணைப்பிடுங்கிப் போட்டார்கள்" என்று தூஷிக்கவில்லையா? தேசிகரை தூஷிப்பவர்கள் "இவருடைய துச் சேஷ்டிதங்களை நன்கறிந்துதானே செருப்பைக் கட்டிவைத்தும், நிமந்த்ரணத்திற்கு ஒப்புக்கொண்டிருந்து வஞ்சித்தும் போந்தார்கள்!" என்று சொல்லி நிந்திக்கவில்லையா? எப்போதும் பூஷிப்பவர்கள் மிகச் சிலராயும் தூஷிப்பவர்களே பலராயுமிருப்பது உலகவியல்வுதானே. * सर्वत: करवीरादीन् सूते सागरमेखला। मृतसंजीविनी यत्र म्रियमाणदशां गता ॥* என்றாரே தேசிகரே. அப்படிப்பட்ட தூஷகர்கள் மலிய மலிய ஏற்றமேயன்றோ. ராமாவதாரத்தையும் க்ருஷ்ணாவதாரத்தையும் பற்றி தூஷணைகள் மலிகின்றனவேயொழிய மத்ஸ்யகூர்மாத்யவதாரங்களைப்பற்றி நெஞ்சாலும் நினைப்பாரில்லையே. உடையவர் பட்டர் நம்பிள்ளை பிள்ளைலோகாசாரியர் தேசிகர் மணவாள மாமுனிகள் என்றிப்படிப்பட்ட ஆசார்யர்களைப்பற்றி தூஷணைகள் ஓங்கி வளர்கின்றனவே யொழிய உய்யக்கொண்டாரையும்

மணக்கால் நம்பியையும் திருக்கோட்டியூர் நம்பியையும் திருக்குருகைப்பிரான் பிள்ளானையும் திருக்கச்சி நம்பியையும் நெஞ்சினாலெண்ணுவாருமில்லையே. தூஷணைகள் மலியுமிடத்திலேதான் உண்மையில் அபரிமிதமான பெருமையுறைகின்றதென்பதை இன்னமும் நாம் விவரிக்கவேணுமா ?

“ எத்தனையோ மஹாவித்வான்களிருக்க அண்ணங்கராசாரியர் எதற்காக எங்கள் பேச்சுக்களைக் கண்டிக்கிறார் ?” என்று, அழுகையோடு அழுகையாக இதையும் எழுதி வைக்கிறார்களிவர்கள். நடாதூரம்மாள் கிடாம்பியப்புள்ளார் முதலானோரிருக்க தேசிகர் எதற்காக சததூஷணி முதலானவை யெழுதிவைத்தார்? என்று கேட்டால் இவர்கள் என்ன பதில் சொல்லுவர்களோ அதே பதில்தான் இங்கும்—என்று பலர் பல தடவை யெழுதியாயிற்று. *அநுப்ரவிச்ய குருதே *என்பது காலவிசேஷங்களில் வ்யக்தி விசேஷங்களில்தான் பலிக்கக் காண்கிறோம்.

“ புத்தங்கோட்டம் ஸ்வாமிக்குத் தமிழில் ஞானமில்லை, ஸம்ஸ்க்ருதத்திலும் ஞானமில்லை ” யென்று அடியேன் தூஷித்திருப்பதாக எழுதுகிறார்கள். இது வீணான ஆரோபணம். அந்த ஸ்வாமி யெழுதின ஈட்டின் விமர்சமெனபது மிகச் சிறிய சுவடி. அதிலுள்ள அர்த்தங்களை சோதிக்குமடைவில் சப்தங்களையும் சோதிக்க நேர்ந்தது. ஸம்ஸ்க்ருத சப்த தோஷங்களையும் தமிழ்மொழிக் குற்றங்களையும் உள்ளபடி யெடுத்துக் காட்ட நேர்ந்தது. ஆழ்வார் பாசுரங்களையெல்லாம் தப்பும்தவறுமாக எடுத்தெழுதினால் ஸஹித்திருக்க முடியுமா ? * வாரா அருவாய் * என்ற அரும்பொருள் நிரம்பிய பாசுரத்தை (வாராய் வருவாய்) என்று கைபோனபடி அநர்த்தமாக எழுதிவைத்தால் வாளாவிட்டுவிட முடியுமா? உலகில் மஹத்தான க்ஷோபமன்றோ ஏற்பட்டுவிடும். இதையா அச்சுப்பிழையென்று சொல்லுவது. நாமெடுத்துக் காட்டியிருக்கிற பிழைகளுக்கு இவர்கள் ஒவ்வொன்றாக பதில் சொல்லட்டுமே. (ப்ரயாகாயாம்) என்று எங்கேயோ சொல்லியிருப்பதாகக் காட்டுகிறார்கள். ஒருவர் கரோமி என்ன வேண்டுமிடத்து குர்மி என்று ப்ரயோகித்து விட்டு *ந த்வா குர்மி தசக்ரீவ !* என்கிற ஸ்ரீராமாயணச்லோகத்தைத் தேடிக் காட்டினாராம். அவருடைய எழுத்து கிடக்கட்டும் ; அவர்க்காகப் பரிந்து எழுதுமிவர்களுடைய எழுத்துக்களைச் சிறிது சோதிப்போம். இவர்களுடைய காகிதத்தில் * த்ராமவத ந தெஜொ ப்ருஹிதாஸ்யசக்தி: * என்றொரு ச்லோக முதாஹரித்திருக்கிறது. இது மிகச் சிறந்த தென்னாசார்ய ஸம்ப்ரதாய திலகபூத மஹாவித்வானுடைய ச்லோகமென்று இவர்கள் உகக்கின்றார்கள். சுலோகமோ ஆச்சரியமானது ; தேசிகருடைய பெருமையை உண்மையாகக் கூறுவது. இது இவர்கள் வாயில் நுழைந்து உருமாறிவிட்ட பரிதாபத்தை என்னவென்று சொல்வது ! (தெஜொ ப்ருஹித) என்றெழுதுகிறார்கள் ; இவர்கள் கோஷ்டியில் மஹாமஹா பண்டிதர்களென்று புகழப்படுகிறவர்களுகம் இப்படியே கோஷிக்கிறார்கள். बृहित (ப்ருஹித) என்று ஒரு ஸம்ஸ்க்ருத பதமுளதா ? என்று விமர்சிப்பார் ஒருவருமில்லை. * இதிஹாஸ புராணாப்யாம் வெதம் ஸமுபப்ரும்ஹயெத் * என்றும், *வெதொபப்ரும்ஹணார்த்தாய தாவக்ராஹயத ப்ரபு: *என்றும்* உபப்ரும்ஹிதவெதாய நமொ வ்யாஸாய * என்றுமுள்ள ச்லோகங்கள் இவர்கள் வாயில் ஒருநாளும் நுழைந்து புறப்படவில்லையா ? * த்ராமவத நதெஜொ ப்ரும்ஹிதாஸ்யசக்தி: என்கிற சுத்தபாடம்

இவர்களுடைய கோஷ்டியிலேயே ப்ரவேசித்ததில்லை. இத்தப்புப் பாடத்தைக் கண்டித்து இவர்களை சிக்ஷிப்பாருமில்லையந்தோ. தப்பைத் திருத்திக் கொடுத்தாலும் நன்றி பாராட்டி ஸ்வீகரிக்கமாட்டாமல் இந்தத் தப்பையே ஸமர்த்திக்க வெகு பரிச்ரமங் கொள்வர்கள். ப்ரும்ஹித சப்தம் வேறு, ப்ருஹிதசப்தம் வேறு என்றும், ப்ருஹசப்தத்தின்மேல் ப்ரத்யயமவந்து ப்ருஹித என்றாகிறதென்றும் ஏதேதோ பேசப்பார்ப்பர்கள். ஒன்றும் பயன்படாது. “ இப்படிப்பட்ட தப்புகளைக் கூசாமல் கூறுமவர்களே எங்களு

டைய கோஷ்டியில் அக்ரதாம்பூலம் பெறும் பண்டிதோத்தமர்கள்" என்று உண்மையை யிசைந்து பிழைக்க வேண்டுமேயொழிய வேறுவழியில்லை யிவர்களுக்கு.

இப்படி அபத்தக்களஞ்சியமான விவர்கள் விவாதங்களை நம்மோடே வைத்துக் கொள்ளாமல் ஸர்வஜ்ஞ ஸார்வபௌமரான மணவாள மாமுனிகளின் திருவாக்கையும் தொட்டு *யுஷ்மத் பாதாரவிந்த* என்று யதிராஜ விம்சதியிலருளிச் செய்தது மஹத்தான பிசகுஎன்று அகாண்டே ஒரு தூஷணத்தைக்கிளப்பி ஆரவாரங்கள் செய்து அருமையனா சாஸ்த்ரார்த்தங்களைப் பெற்று ஓய்ந்தொழிந்தார்கள. வேச்யைகள் பதிவ்ரதாதர்மோபதேசம் பண்ணுமாபோலே இவர்கள் நமகது உபதேசிக்க வருகிறுர்கள். முதன் முதலாக ஆசார்யநிந்தைகளைக் கிளப்பினவர்கள் இன்னுரென்பதை உலகமறியாமலா இருக்கிறது. இவர்கள் தாம் அறியாரோ?

"ஈட்டின் விமர்சத்தை தூஷித்தால் அதுஈட்டிற்கு தூஷணமாகத்தான் முடியும்" என்று ஆகாச தாண்டவமாக எழுதுகிறுர்களிவர்கள். ஈட்டுப்பங்க்திகளில் ஒன்றுக்குக் கூட உண்மையான அர்த்தம் கேளாமலும் உணராமலும் அபார்த்தம் க்ரஹித்ததோடு நில்லாமல் அதை உலகறியப் பரவவும் செய்த அந்த ஈட்டின விமர்சத்தைத் தொலைத் தொழித்ததானது ஈட்டுக்கு விலையுயர்ந்த ஸ்வர்ணகவசம் சாத்தினபடி யென்றே விவேகிகள் கூறுகின்றுர்கள். "ஆச்ரயண வேளையோடு ஹோம வேளையோடு வாசியற ஒரு மிதுநமே உத்தேச்யம்" என்ற ஈட்டு ஸ்ரீ ஸூக்திக்கு சப்தார்த்தங்கூட உள்ளபடி தெரிந்துகொள்ளாதவர்கள் இவர்கள் - என்று அடியேன் பரக்க நிரூபித்திருக்கிறேன். (வாசியற)என்பது எங்கே அநவயித்து எவ்விதமான பொருளைத் தருகின்றது என்பதைக் கூட அறியமாட்டாமல் அஸமஞ்ஜஸமாகச் சொல்லியுமெழுதியும் போருமிவர்கள் ஈட்டு விமர்சந கர்த்தாக்களாம். இந்த வொரு விஷயத்திலாவது இவர்கள் சிறிது கை காட்டட்டுமே. விஷயங்களுக்கு பதில் விஷயம் நாங்கள் எழுதப் போகிறதில்லையென்று காட்டி நின்ற இவர்களை நோக்கி நாம் இது கூறுவதும் பிசகே. இப்படி எழுதிநின்ற விவர்கள் ஏதோ பெரியவிஷயம் கண்டவர்கள் போலே ஒரு விஷய மெழுதியுள்ளார்கள்; அதாவது —

*அகலகில்லேன் பாசுரத்தினீட்டில் ப்ரபத்திரூபமான உபாயமே ஸர்வோத்க்ருஷ்டமென்று எழுதியிருப்பதற்கு விருத்தமாக அடியேன் பராமர்சநூல் பக்கம் 33-ல், அதமாதிகாரிகளுக்குத்தான் ப்ரபத்திஉபாயமென்றும் உத்தமாதிகாரிகளுக்கு அது ஒருகாலும் உபாயமாகமாட்டாதென்றும் எழுதியிருக்கிறேனும். அந்தோ! படித்தவர்கள் இப்படி மருள்வர்களா? ஈட்டின் விமர்சனத்தைப்பற்றி பதிலாக அடியேனெழுதிய பகுதியில் அதமாதிகாரி உத்தமாதிகாரியென்கிற ப்ரஸ்தாவமே செய்ததில்லை. உண்டாகில் ஒரு ஸதஸ்ஸூ கூட்டியெடுத்துக் காட்டட்டும. வேறொருவாதியைக் குறித்து அதை நாம் எழுதியிருப்பதுண்டு. விஷயமருமத்தை உள்ளபடி க்ரஹியாமல் பாமர ப்ரதாரணம் பண்ணத்தகாது. (ப்ரபத்தியே உபாயம்)(ப்ரபத்தி உபாயமே)என்று இரு வகையான வசனஸந்தர்ப்பங்களுண்டு. இவற்றில் (ப்ரபத்தியே உபாயம்) என்கிறவாக்கியமானது ஸித்தாந்திகளுக்கு ஸம்மதம். இதுதான் ஈட்டில் பலகாலுமுள்ளது. திருக்கச்சி நம்பி யாறு வார்த்தைகளிலும் இதுதான் மூன்றுவது வார்த்தையாகவுள்ளது. மற்றவற்றை விட்டொழித்து ப்ரபத்தியே உபாதேயமாகக் கொள்ளத்தக்கது—என்பதே இதன் பொருள். உத்தேச்யம், உபாதேயம், ப்ராப்தம் இத்யாதிகளுக்குப் பர்யாயமாக உபாயமென்னப்படுகிறது. ப்ரபத்தியே உபாயமென்கிற வாக்யம் இப்பொருளிலேயே வந்ததாதலால் இது அவிகீதம். (ப்ரபத்தி உபாயமே) என்பவர்கள் இப்பொருளை விட்டு வேறுபொருளை யுத்தேசிக்கிறுர்கள். ப்ரபத்தி ஸாதனமா அன்று என்றுசர்ச்சித்து முடிவு செய்வதாகக் கொண்டு இவ்வாக்யத்தை எழுதி வருகிறுர்கள். இப்போது ஸித்தாந்திகள் சொல்லவேண்டிய தென்னவென்றுல் ப்ரபத்தியை ஒன்றுக்கும் ஸாதனமாக்காதே அதை ஸ்வயம் ப்ரயோஜநமாகவே கொள்ளும் உத்தமாதிகாரிகளுக்கு அது ஒரு

காலும் ஸாதனமாகாது, ஸாத்யமாகவேயாகும்; கீழ்ப்பட்ட அதிகாரிகளுக்குத்தான் அது ஸாதனமாகும். அன்னவர்களே அதை விலையாகக்கொண்டு அதனால் ஒன்றைப் பெற நினைப்பர்கள்; உத்தமர்கள் அதை ஸாஸாதனமாக்காதே ஸ்வமாக்குவர்களத்தனை என்பதே சொல்லவேண்டும். இதையே சொல்லி வைத்திருக்கிறேனடியேன். இவ்விதமாக உடனுக்குடனே விடை கூறுகின்ற அடியேனைப்போல் இவர்களும் விடை கூறவேண்டுமவற்றுக்கு விடை கூறினாலன்றோ தத்துவம் விளங்கும். அதுதானில்லையே. வைகிறார் தூஷிக்கிறார் நிந்திக்கிறார் என்கிற இப்பாட்டுத்தானே இவர்களது காகிதங்களில் பெரிய விஷயமாக நிற்கிறது. இவர்கள் வாய்திறக்க வொண்ணாதபடி கெட்டியான வாய்ப்பூட்டு போட்டு விட்டால் வேறு என்ன செய்வார்கள் பாவம்! ஐயோ ஐயோவென்று கத்தவேண்டியதுதான். இப்படி கத்திக் கத்தியே இவர்கள் ஆயுளைக் கழிக்கட்டும். ஸ்ரீஜயந்தி ஸமீபிக்கிறது; மறுநாள் உறியடித்திருநாள் எங்கும் நடைபெறும். சென்று பார்க்கட்டும். 'ஐயோ! என்தலையில் தண்ணீரை வாரிக் கொட்டுகிறார்களே!' என்று உறியடிக்காரன் கத்துவதுண்டோ? இதை லக்ஷியம் பண்ணாமல் தன்காரியத்திலன்றோ கண்ணாயிருப்பன். இதை ஒரு ஏகதேச த்ருஷ்டாந்தமாகக் கொள்க.

ஆழ்வாரையும் எம்பெருமானாரையும் நாம் அதமாதிகாரிகளாக்கி விட்டதாக இவர்களே ஸித்தவத்கரித்துக்கொண்டு இதைவிட மஹாபாதகம் வேறுண்டோவென்றும் இப்படி குண்டு தைரியமாக ஆழ்வார் பாஷ்யகாரர்களையே தூஷிப்பவர்கள் பிறரை தூஷிப்பது ஆச்சரியமோவென்றும் எழுதுகிறார்கள். தேசிகருட்பட ஸகலாசார்யர்களும் ப்ரபத்தி ஸாதனமன்று என்றே கல்வெட்டாக ஸ்தாபித்து வைத்திருக்கிறார்களென்று, அசைக்கவுமொண்ணாதபடி நிலைநாட்டி வைத்திருப்பதை ஸஹிக்கமாட்டாமலும், அதற்குமேல் வாய்திறக்கமாட்டாமலும், வாய்திறந்தாலும் பங்கம் தவிர வேறொன்று காணமாட்டாமலுமிருக்கின்ற இவர்கள் இப்படித்தானே யெழுதி ஆச்வஸிக்கவேண்டும்.

பராமர்சஸார ப்ரகாசனமென்கிற விவாதகாகிதத்தை வெளியிட்டிருக்கிற வொருவர் உண்மையில் புத்தங்கோட்டம் ஸ்வாமியிடத்தில் பரிவும் பக்தியுமுள்ளவரல்லர். அவர்க்கு மேன்மேலும் பரிபவங்கள் நேரவேணுமென்று பாரிப்பவரே இக்காகிதம் வெளியிட்டிருக்கிறார். அவருடைய பெருமையை எடுத்துரைப்பவர்போல வெளிவந்து, அவர் பெற்றிருக்கிற ஸத்காரவாக்யங்களை ஒன்று பத்தாகப் பெருக்கி இன்னமும் தெரியாதவர்களுக்கும் பறைசாற்றித் தெரிவித்து ஆனந்திக்கவே இவர் புறப்பட்டிருக்கிறார். ஒருத்திக்கு ஸ்வைரிணியென்கிற பட்டப்பெயர் எங்கேயோ ஒரு மூலையில் ஏகாந்தமாக உலவிவந்ததாம்; அதை பஹிரங்கப்படுத்திக் களிக்க ஆசைகொண்டவர்கள் "இது என்ன அநியாயம்! அவளுக்கு வயது நாற்பதாயிற்று; ஸ்ரீமஹாலக்ஷ்மி போலிருக்கிற அவளையா ஸ்வைரிணி யென்பது! தைவம் ஸஹிக்குமா? என்று ஊர்தோறும் வீதிதோறும் வீடுதோறுமேறிச் சென்று சொல்லிச் சொல்லி மாய்வதுண்டு. இதுசிலருடைய ஆனந்த பரீவாஹம். அவ்வண்ணமாகவே ஒருவர் புத்தம் ஸ்வாமியின் ஸ்வல்பப்ரஸித்தியையும் பொறுக்கமாட்டாதவராய் அவருடைய பங்கத்தை உலகமேழு முணரட்டுமென்றே இப்படியொரு நடனஞ்செய்ய வெளிவந்திருக்கின்றார். இதை அந்த ஸாதுவும் தெரிந்துகொள்ளாமல் தம்மைப் போரப்பொலியப் புகழ்வதாகவேயெண்ணி தம்முடைய பங்கம் மறைந்துவிட்டதாக மகிழ்கிறார். மகிழட்டும். அவர் பெயரால் வெளிவந்தவிமர்சக்ரந்தத்திலுள்ள தெல்லாம் தீயினில் தூசாகியிருக்கிறது. அவற்றை ப்ராமாணிகமாகப் புநஸ்ஸஞ்ஜீவனம் பண்ணினாலொழிய பங்கம் மறையாது. அதற்கு வழியில்லாமல் ஸ்ரீ ஸ்வாமியின்விஷயமாக இவர்கள் எத்தனையுபாலம்பங்களைக் கிளப்பினாலும் அத்தனையும் ஸ்வாமியின் யசோராசி விஸ்தாரணமேயாகுமென்பதில் ஸந்தேஹமுண்டோ?

ஸ்ரீ ஸ்வாமியைப்பற்றிச் சிலரோ பலரோ அபாரமாக தூஷணைகளை யெழுதி வெளியிட்டிருக்கிறார்களென்பது வாஸ்தவமே. இல்லையென்று அபலாபம் செய்வார்

ஆருமில்லையே. உலகம் நிறைந்த புகழாளர்களான ஸ்ரீமத். ஸர். எஸ். வரதாசாரியார், வி. வி. ஸ்ரீநிவாஸய்யங்கார், D. ராமஸ்வாமி ஐயங்கார் போல்வாரான மஹான்களின் பரவசமான மதிப்புரைகளுக்கு மதிப்பு ஏற்படுமா, வழிப்போக்கர்களின் வம்புப் பேச்சுகளுக்கு மதிப்பு ஏற்படுமா? என்கிற இதனைக் கூட விவேகிக்கவில்லாத அஸூயாபிண்டங்கள் நாள்தோறும் நிமிஷந்தோறும் பலபல காகிதங்களைப் பரவச்செய்து கொண்டு கிடக்கட்டுமே. ஸ்ரீ பாஷ்ய ஸ்ரீ பாஷ்யகாராதிகளை தூஷித்து மூலைமுடுக்குகளில் எத்தனை பாஷைகளில் எத்தனை கந்தைகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன தெரியுமோ? அவற்றால் அவர்களின் தேஜஸ்ஸுக்கு என்ன ஹானி விளைந்திட்டது? 'இராமனுடைய ஸங்கதியைப்பற்றி கரதூஷணாதிகளைக் கேட்டாலல்லவோ தெரியும்; மாரீசனைக் கேட்டாலல்லவோ தெரியும்' என்று சொல்லுவார் நாளைக்குமிருக்கின்றார்களல்லவோ? அதுபோல இவர்களும் "மஹாமஹோபாத்யாயரென்றும் அபிநவபட்ட பாணரென்றும் உலகப்ரஸித்தராயிருந்த ராயம்பேட்டை க்ருஷ்ணமாசார்யரைக் கேட்டாலன்றோ அண்ணங்கராசார்யருடைய அபசப்தங்கள் தெரியவரும்" என்கிறார்கள். அந்த ராயம்பேட்டை க்ருஷ்ணமாசாரியர் ஸ்வாமி மஹாப்ராஜ்ஞர், மஹாப்ராமாணிகர், மஹாரஸிகர். அவர் ஸ்ரீ ஸ்வாமிக்கு வெகுகாலம் ஸுஹ்ருந்மணியாயிருந்து இடையில் இரண்டொருவருஷகாலம் வேறுபட்டுச் சில நிந்தைகளை யெழுதி, உடனே ஸ்ரீ ஸ்வாமியின் ரஸிகபுத்ரஞ்ஜநம் உபதேசரஸாயநம் முதலிய அருமையான நூல்களைப் பெற்று அநுதாபங் கொண்டு காஞ்சீபுரத்திற்கு நேராகவந்து, ஸ்வாமி திருமாளிகைக்கே போந்து பழைய நட்பைப் புதுப்பித்துக்கொண்டு சென்று அதுமுதலாக ஸ்வாமியின் பெருமைகளை பறைசாற்றுபவராகவே விளங்கியிருந்தாரென்பது ஸஸாக்ஷிகம். திருக்குடந்தையில் ஸ்ரீ உ. வே. N. ஸ்ரீநிவாஸையங்காரென்பவர் ப்ரபலரான பெரியார், அத்யாபி விளங்குபவர். இவரைக் கேட்டால் இவ்வுண்மைகளை யெல்லாம் உள்ளபடியுரைப்பர். ஆர்யதர்மபத்ரிகையின் பல இதழ்களே இதற்கு ப்ரபலஸாக்ஷி. ராயம்பேட்டை க்ருஷ்ணமாசாரியரென்று இவர்களாக ப்ரஸ்தாவித்திருப்பதனால் நாம் இவ்வளவு உண்மையைத் தெரிவிக்க ப்ராப்தமாயிற்று. அவரும் மாத்ஸர்யத்தோடேயே காலஞ்சென்றுவிட்டதாகவே யிருந்தாலும் அதனால் ஸ்வாமிக்கு என்னகுறை? சேட்லூர் நரஸிம்ஹாசாரியர்முதலான மற்றும் பலபேர்களையும் இவர்கள் இப்போது ஏன் பிடித்திழுக்கவில்லையோ? அவர் க்ஷாமண பத்திரிகை யெழுதிக்கொண்டது மறைக்கமுடியாமல் தேறிவிட்டதனாலன்றோ அவரை விட்டிட்டார்கள். எதிரம்புகோத்த ஒவ்வொருவர்க்கும் அதுவே கதிதானென்பது திடமாக நினைவிலிருக்கத்தக்கது. மனிதர்களுக்கு முக்குணங்களும் மாறிமாறி வருகின்றன. ரஜஸ்தமோ குணங்கள் தலையெடுக்கிற காலத்திலே எதிரம்பு கோப்பதும் ஸத்வம் தலையெடுக்கிற காலத்திலே *ஜாநே த்வாம் புருஷோத்தமம்* என்று போற்றுவது முள்ளது. இவர்களே ஸ்வல்பகாலம் முன்வரையில் ஸ்ரீஸ்வாமியைப் பரதேவதையாகப் போற்றினவர்கள்தானே; வெகுவிரைவில் *அடிக்கீழமர்ந்து புகுந்தேனே* என்று வணங்கி வாழப்போகிறவர்களுமிவர்களே.

"ப்ரஹ்மவித்தான ஸ்ரீ வைஷ்ணவரைக் குறித்து வநம்ருகமென்று......" இத்யாதியை யெழுதி மற்றொருவர்க்கும் விசேஷஸத்காரங்களைப் பெறுவித்துக் களிக்கப் பார்க்கிறாரிவர். விஷய விசாரலேசமுமில்லாத வம்புக்காகிதங்களுக்கு இவ்வளவு பதிலுரைத்ததே போதும். "துரகவதநதேஜோ ப்ரஹ்மித" என்றவிடத்து உண்மைப்பாடத்தை யுணர்த்தி உபகரித்ததுதான் இப்பத்திரிகையின் ஸாரம்.

ஸ்ரீ புத்தம் ஸ்வாமி "அபராத க்ஷாபணத்தைப் பண்ணிக்கொள்ளுகிறே" னென்று ஸாதித்ததாக எழுதியிருக்கிறார். இதே வாசகம் அந்தமஹா பண்டிதரின் திருவாக்கில் வெளிவந்ததாகில் "க்ஷாபணமென்பது அபசப்தம்; இனியாவது க்ஷாமணமென்று வ்யவஹரிக்க" என்று அடியேன் விஜ்ஞாபித்ததாகத் தெரிவிப்பது. மணல் சோற்றில் கல்லாராய்கிறோமே யென்கிற ஸங்கோசத்தோடு முடிக்கிறேனிதை. பெயரை வெளிக்காட்டாமலும் அச்சுக்கூடத்தை வெளியிடாமலும் தூஷிக்க முற்பட்டவிவர்கள் "நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்" என்பதை நினைப்பூட்டினாராயினர். ... *

ரத்னம் பிரஸ், 11, பத்ரையன் தெரு, மதராஸ்-1.

ஸ்ரீமதே ராமானுஜாய நம:

# பூர்வாசாரியர்களும் இற்றைய ஆசாரியரும்

ஆஸ்திக அக்ரேஸராராய் ஞானமும் அனுட்டானமும் பெற்றிருந்த நம் பூர்வாசார்யர்களின் மார்க்கத்தை நாம் பின்பற்ற வேண்டும். நமக்கவர்கள் உதவிப்போந்த க்ரந்தங்களாகிற பொக்கிஷங்களை அனுபவிக்கும்படியான ஞானம் சிறிதும் நாம் பெற்றேமில்லை. இக்காலத்தில் (சில ஆசார்யர்களைத் தவிர) எவர்களேனும், அவர்கள் உதவிப்போந்த கிரந்தங்களைப்போல் ஒரு கிரந்தமாவது எழுதத் திறமையுடையவர்களோ? அன்னவர்களைக் காண்பதரிது. அம்மஹான்களுடைய திவ்ய வாழ்வோடு நம்முடைய வாழ்வை ஒத்திட்டுப் பார்த்தால் நாம் எத்தகைய பரிதாபகரமான அக்ஞான நிலையிலிருக்கிறேம் என்பதை உணரலாம்.

இம்மஹா ஆசாரியர்களும், அவர்களுடைய சிஷ்யர்களும் பகவத் விபூதியிலுள்ளவர்களைச் சீர்திருத்துவதற்காக பசியையும் தாகத்தையும் பொருட்படுத்தாது, தீவிர வெப்பத்தையும் குளிர்ச்சியையும் ஸகித்தும், நாடென்றும் காடென்றும் பாராது, பகவத் கைங்கர்யத்திலும் த்யானத்திலும் ஆழ்ந்து கிடந்தார்கள். இவர்களை உலகத்தார் உபேக்ஷித்துத் துன்புறுத்திய போதும் அவமதித்த போதும் ஸஹித்து வந்தார்கள்.

எவன் ப்ராக்ருத விஷயானுபவங்களைப் பெற விரும்புகிறானே அவன் அல்பமும் அஸ்திரமுமான போகங்களையும் சரிவர அனுபவியாது தம் ஜீவியத்தை நஷ்டமாக்குவானென்பதும், எவன் இவ்வுலகத்தை வெறுக்கிறானே அவன் ஸாயுஜ்ய பதவியை யடைந்து நித்ய கைங்கரியமான ஸ்ரீயைப் பெற்றுப் பரலோக வாழ்வைப் பெறுவானென்பதும் நூல்களின் துணிபு.

ஆகவே மஹான்கள் இந்நிலவுலகில் கஷ்டங்களை அனுபவித்தாலும் இவர்கள் பரலோகத்தில் பெறுவது பேரின்பமாகுமென்பது தெளிவு. இத்தகையோர் பகலெல்லாம் பரோபகாரமாய் உழைத்து இரவெல்லாம் பகவத் தியானத்தில் ஆனந்தித்திருப்பார்கள்.

"ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை" செய்யும் மஹான்கள் இத்தகையோராவர்கள். இவர்கள் பகவத் விஷய ஈடுபாட்டால் "அண்ணிக்கு மமுதூறும் என்னாவுக்கே" என்ற அனுபவரஸிகர்களாதலால் இவர்கள் ஏழையர்கள்போல் திரிந்தாலும் இவர்கள் பெறும் சம்பத்தும் ராஜ்யமும் வேறாம். இவர்கள் இவ்வுலகிலுள்ளபோது கதியற்றவர்கள்போலிருந்தாலும் இவர்கள் உள்ளத்தில் பகவத் ஞானமும் சாந்தியும் பொலிந்துநிற்கும்.

இம்மடவுலகத்தார் இவர்கள் பெருமையை அறியாவிட்டாலும் எல்லாம் வல்ல இறைவனது ப்ரீதிக்குப் பாத்திரமாவார்கள். உலகத்தார் மஹான்

களை அன்னியராக பாவித்தாலும் பகவான் இவர்களைத் தம்மவரென்றும் தம் சமீபத்திலிருப்பதாகவும் எண்ணி இவர்கள் வரவை ஆவலுடன் எதிர்பார்க்கிறான்.

இத்தகைய மஹான்கள் தங்கள் பெருமைகளைத் தாமே அறியார்கள். உலகத்தாரோ அன்னவர்களை இழிவாக வெறுத்தாலும் அப்பெரியார்கள் பகவானுடைய உகப்புக்கும் அனுக்ரஹத்திற்கும் இலட்சியமாகிறார்கள்.

இப்பெரியோர்கள் அஹங்காரமமகாரமென்னும் வாசனையற்றவர்களாய், வணக்கமே வடிவு கொண்டவர்களாய், தயையும் பொறுமையுமே நடத்தையாகக் கொண்டவர்களாய், தம் வாழ்நாளைப் புனித வாழ்வாகக் கொண்டவர்களாதலால் நாளுக்கு நாள் ஆத்ம வளர்ச்சி பெற்றவர்களாய் பகவானுடைய அருளுக்கு இலக்காவர்கள்.

பகவான் கீதையில் இத்தகைய ஞானிகளைத் தானென்றே சொல்லுகிறான். இத்தகைய மஹான்கள் ஆயிர வருடங்களுக்கு முன் தோன்றி மறைந்தாலும் இவர்கள் உபகரித்த க்ரந்தங்களும் நடவடிக்கைகளும் சந்திர சூரியர்கள் உள்ள காலம் வரை பூஜிக்கப்பட்டு வரத் தக்கனவாதலின் இவர்களுடைய ஆண்மையும் ஆற்றலும் எத்தகையதாக இருந்திருக்கவேண்டும்.

இவர்கள் தாம் ஞான வீரர்களாய் "அந்தமிலாப் பேரின்பம் அருந்தவேற்கும் அடியோமை மந்திரமும் மந்திரத்தின் வழியுங்காட்டி வானேற்றி தந்தையென நின்ற தனித்திருமால் தாளில் தலை வைக்கும்படி செய்பவர்கள்.

மேற்கண்ட பூர்வாசாரியர்களின் வைபவங்கள் யாவும், நாம் உஜ்ஜீவிக்கும்பொருட்டு பரம காருணிகரான பகவான் இக்காலத்தில் நம்பரமாசாரியரான ஸ்ரீமான் **அண்ணங்கராசாரிய ஸ்வாமிகளான** இவ்வொருவரிடமேஒருங்கே பிரகாசிக்கும்படி கிருபை செய்தது நம் பரத கண்டம் பெற்ற பாக்கியமாகும்.

"பெருங் கேழலார் தம் பெருங்கண் மலர்ப் புண்டரீகம் நம் மேல் ஒருங்கே பிறழ வைத்தார்" என்பது அக்காலத்தில் நம்மாழ்வாருக்கே மாத்திரமன்றி இக் காலத்தில் நம் ஸ்வாமிகளும் அவ்வாறே கடாக்ஷிக்கப் பெற்றவரென்பது, இவர் வைபவத்தைப் பேசப் புகுந்த பல மஹான்கள் இவர் அவதார புருஷரென்றும், மற்றொரு இராமானுஜ ரென்றும், ஸ்ரீவைஷ்ணவமே வடிவெடுத்தவரென்றும், காஞ்சீபுரஜோதி யென்றும் பலபடியாகப் போற்றிவருவது இதற்குச் சான்றாகும்.

இம் மஹாசார்யரை லபிக்கப்பெற்ற நாம், இவர் ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணலார்திருவம்சத்தி லவதரித்த குலப்பெருமையை தியானிப்பதும் இவர் பன்னிரு திரு நாமமணிந்து விளங்கும் திரு மேனியின் பொலிவை தினே தினே தரிசிக்கப் பெறும் பாக்யத்தை நினைப்பதும், இவ்வாசாரியருடைய திவ்ய தினசரியை அனுசரிப்பதும், இவருடைய மஹா உபதேசங்களைப் பெறுவதும் இவர் தம் கங்காப்ரவாஹமான உபன்யாஸங்களைக் கேட்டு ஆனந்தமடைதலும், இவர் வெளியிட்டுள்ள பல நூற்றுக் கணக்கான வெளி

யீடுகளை வாசித்தறிதலும், இவர் திவ்யதேசங்களில் உத்ஸவகோஷ்டிகளை அலங்கரிப்பதைக் கண்ணுக்கினிதாகக் கண்டு களிப்பதும், இவர்ஸ்தாபித்த சந்நிதிகளை சேவிப்பதும், இப்பாரதகண்டம் முழுமையும் இவர் பலகால் யாத்திரை செய்து ஆங்காங்கு எம்பெருமான்களை மங்களாசாஸனம் செய்து ஸகல பாஷைகளிலும் சொற்பொழிவாற்றி வரும் பிரபாவத்தை அனுசந்திப்பதும் ஆகிய இவையெல்லாம் நம் கடமைகளாகும். இதுவே நமக்கேற்ற புருஷார்த்தமுமாகும்.

எம்பெருமானுடைய பெருமையைப் பேசுங்கால் "அங்கங்கெல்லாம் உறவுயர் ஞானச்சுடர் விளக்காய் நின்றதன்றி ஒன்றும் பெற முயன்றாரில்லையால்" என்றாற்போலே இம் மஹாசார்யருடைய பெருமைகள் எவராலும் பேசித்தலைக் கட்டமுடியாதன்றோ?

நம் பாக்கிய வசத்தால் இம் மஹா ஆசாரியராகிற ஸ்ரீ. அண்ணா ஸ்வாமிகளைப் பெரும்பேறாகப் பெற்ற நாம் இவர் இவ்விபூதியில் பல்லாண்டு பல்லாண்டாக எழுந்தருளியிருந்து அஸ்மதாதிகளை வாழ்வித்தருள வேண்டுமென்று திருமகள் கேள்வனைப் பிரார்த்திப் போமாக.

M. தேவராஜன்,
(ரிடைர்ட் ஹெட் போஸ்டுமேஸ்டர், மதராஸ்.
13—7—1952.

* சென்னைத் தொண்டமண்டலம் ஸ்கூல்ஹாலில் பகவத்கதா ப்ரஸங்க ஸபையின் சார்பாக நம்ஸ்வாமிகள் ஏழுவருஷகாலமாய் சனிக்கிழமை தோறும் அற்புதமாக நடத்திவந்த ஸ்ரீராமாயண மஹோபந்யாஸங்கள் முடிவடைந்து 13—7—1952 ஞாயிற்றுக்கிழமையன்று பட்டாபிஷேகம் நிகழ்ந்த மஹா கோஷ்டியில் இப்பத்திரிகை ஸ்ரீஸ்வாமிகளின் திருவடிவாரத்தில் ஸமர்ப்பிக்கப்பட்டது.

சுபமஸ்து.

# மரண சிந்தனை

மரணம் எந்த நிமிஷத்திலும் நேரக்கூடியது. நேற்றிருந்தாளன்னை இன்று வெந்து நீருனுள் என்னும் படியான நிலைமையிலிருக்கிறோம்.

அத்தமும் வாழ்வும் அகத்து மட்டே என்றவாறு நம் பூத உடலை விட்டு ஆத்மா பிரிந்த சில நாட்களிலேயே நம் உற்ருரும் பிறரும் நம்மை மறக்கிருர்கள். முன்னுண்டவரே மாண்டார் என்றிருக்க இவ்வுலக வாழ்வை சதமென்றிருத்தல் பேதைமையாகும்.

கூற்றுவன் எப்போதாவது வருவான், போற்றிறும் போகான் பொருளொடும் போகான் என்னும் நினைவு இருத்தல் வேண்டும். ' மாக வைகுந்தம் காண்பதற்கு என்மனம் ஏக மெண்ணும் இராப்பகலின்றியே' என்ற ஆர்த்தியுடையவர்கள் மரணத்திற்குப் பயப்படமாட்டார்கள்.

' தொன்மா வல்வினைத் தொடர்களை முதலரிந்து நின் மாதாள் சேர்ந்து நிற்பது என்ஞான்று கொலோ' என்னும் அனுதாபம் பிறந்தவனுக்கு வைகுந்தம் புகுவது நிச்சயமாகும்.

சரீரத்தின் அநித்யத்வத்தை அறியாது, பகவானை நினைப்பதற்கான காலம் நாளை, நாளை என்றிருப்போமாளுல் நமனுக்கிரையாவோம்.

ஆகையால் நன்றென்பதை இன்றே செய்யவேண்டும். ' எய்ப்பென்னை வந்து நலியும்போது அங்கேதும் நானுன்னை நினைக்கமாட்டேன் அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தேன்' என்றவாறு பகவானை இரவும் நன்பகலும் பெருமையும் நாணும் தவிர்ந்து பிதற்றுதல் வேண்டும்.

நாம் உஜ்ஜீவனத்தைப் பெருது நீண்டகாலம் ஜீவித்திருப்பதால் யாது பயன்? ' உனபாதம் நண்ணுநாள் அவைதத்துறுமாகில் அன்றெனக்கவை பட்டினி நாளே' என்ற ஏக்கம் பிறத்தல் வேண்டும். 'கோவிந்தற்கு ஓர் குற்றேவல் இம்மைப்பிறவி செய்யாதே இனிப் போய்ச் செய்யும் தவந்தானென்' என்பதனுல் இப்போதே பகவானைப் பூஜிப்பதும் அவனடியார்க்கு கைங்கரியம் செய்தலும் வேண்டும்.

இவ்வாறல்லாமல் இப்பாழுடலை வீணே சுமந்து திரிவதால் பாபத்தை அதிகமாய்ச் சம்பாதித்துக் கொள்வோமே தவிர ஜென்மத்தை ஸபலமாக்கிக் கொள்ளமாட்டோம்.

' மாளுமோரிடத்திலும் வணக்கொடு மாள்வது வலமே' என்றபடி, ஒருநாளில் ஒரு பொழுதாவது பகவானைச் சிந்திப்போமாளுல் அன்பர்கள் செய்வது அணுவெனினும் மேருவாக் கொள்ளும் தகவுடையோன் நமக்கு அருள் செய்வான்.

மரணமானது பய்ங்கரமெனினும், நீண்டகாலம் உண்டியே உடையே என்று வியர்த்தமாக ஜீவித்திருப்பதானது மரணத்தைவிடப் பன்மடங்கு பயங்கரமானது.

எவனொருவன் மரண காலத்தை சிந்திப்பனோ அன்னவன் "கூவிக் கொள்ளும் காலமின்னும் குறுகாதோ" 'குறையாத வினையகற்றி அடிமை கொள்ளக் குறுகவொரு நன்னாள் நீ குறித்திடாயே' என்றலற்றி பகவானை அடையும்படியான காலத்தை எதிர்பார்த்திருப்பன். 'பிறவாமை எனைப் பணி எந்தைபிரானே' 'மேலால் பிறப்பின்மை பெற்று அடிக்கீழ்குற்றேவலன்று மறப்பின்மை யான் வேண்டும் மாடு' என்று அந்தமிலாப் பேரின்பமடைவதற்கான பக்குவமடைகிறான்.

வன்மையும் இளமையும் மாறி, வன்பல் விழுந்து, இருகண்களிருண்டு, நரை திரைவந்து, உழலுவதற்கு முன்னமே வளரொளி மாயோனை வழிபடுதல்வேண்டும்.

கள்வர்கள்பயத்தை அறிந்தவுடன் திரவ்யங்களைக் காப்பாற்றுகிறோம். ஆனால் ஆத்ம ரத்னத்தை எமபடர்கள் தினேதினே கொள்ளை கொள்வது கண்டும் எத்தகைய ஜாக்கிரதையோடிருக்கிறோம்?

சூதனாய் கள்வனாகி தூர்த்தரோடு இசைந்து போக்கிய காலத்தையும் மாதரார் கயற்கணென்னும் வலையுள் பட்டழுந்திப் போக்கிய காலத்தையும் அந்திமதசையில் நினைப்பதால் யாதுபயன்?

உலகத்தை வெறுத்தவனாய், தர்மத்தைப் பின்பற்றியவனாய், ஒழுக்கமுடையவனாய், தவறுதல் நேர்ந்தபோது அனுதாபப் படுபவனாய், பணிந்த சுபாவமுடையவனாய், தனக்குநேரும் கஷ்டங்களைக் கணிசியாதவனாய், போதெல்லாம் போதுகொண்டு பகவானுடைய பொன்னடிகளைப் புனைந்தும் தீதிலாமொழிகள் கொண்டு பகவானுடைய திருக்குணங்களைக் கீர்த்தனம் செய்பவனுடைய அந்திமதசை எவ்வளவு சாந்தியையும் ஆனந்தத்தையும் விளைவிக்கும்.

ஆக்கமுண்டேல் அட்டைகள்போல் சுவைப்பவர்களான ஆபாஸ பந்துக்களை விட்டு எல்லாவித பந்துவுமான பகவானுடைய சரணமே தஞ்சமென்றிருத்தல் வேண்டும்.

இவ்வாறான மேம்பாட்டை அடைவதற்கு தத்வதர்சிகளினுடைய தர்ம மார்க்கத்தைப் பின்பற்றவேண்டும். அவர்கள் நல்லொழுக்கங்களையும் தத்வ உபதேசங்களையும் பின்பற்றி நடத்தல்வேண்டும்.

முடிவாக சிந்தை (பகவானைத்தவிர) மற்றொன்றின் திறத்ததல்லாத் தன்மையனாய், உலகப் பற்றற்றவனாய், ஓதிலும் அவன்பேரே ஓதுமவனாய், அவனுடைய திருவுருவு நினைந்து உருகியவனாய், ஆனந்தக்கண்ணீர் பெருக்கியவனாய், ஸதா பகவத் த்யானத்தில்ஆழ்ந்திருப்பவனாயிருப்பவன், மரண காலமாகிய அந்நாளை நன்னாளாக முகமலர்ச்சியோடு எதிர்பார்த்திருப்பன்.

**M. தேவராஜன்**

*18-7-1952*

# பத்ராதிப ப்ரதிநிதியின் விஜ்ஞாபனம்.

(N. ஜீயப்பங்கார் B. A., ஸன்னிதி வீதி, சின்ன காஞ்சீபுரம்.)

அன்பர்களே! ஸ்ரீராமாநுஜபத்ரிகையின் ஆசிரியரான ஸ்ரீ. உ. வே. P. B. A. ஸ்வாமிகள் சென்ற ஜூலை மாதம் 28-ந் தேதியன்று புறப்பட்டு வடநாட்டு யாத்திரையாக எழுந்தருளியிருக்கிறார். நெல்லூர் முதல் விஜயநகரம் வரையிலுள்ள சிஷ்யர்களின் பிரார்த்தனைக்கிணங்கி தற்காலம் ஆந்திரதேசங்களில் ஸஞ்சாரம் நடந்து வருகிறது. இந்த யாத்திரை எதுவரையில் செல்லுமென்பது ஸ்ரீஸ்வாமிக்கே தெரியாமலிருப்பதால் அதைப்பற்றி அடியேன் விவரித்தெழுத அசக்தனுயிருக்கின்றேன். அனேகமாய் ஸெப்டம்பர் மாதத்தில் ஸ்வாமி ஸ்வஸ்தானமெழுந்தருளும்படியாயிருக்குமென்று நம்பப்படுகிறது.

ஸ்வாமி திரும்பி யெழுந்தருளுகிற வரையில் இப்பத்திரிகையின் நிர்வாஹப் பொறுப்பை "என்னைப் புவியிலொரு பொருளாக்கி" என்கிற க்ரமத்தில் அடியேனிடத்தில் ஒப்புவித்திருக்கிறபடியால் அடியேன் சில விஷயங்கள் விஜ்ஞாபனம் செய்ய ப்ராப்தமாகிறது. இப்பத்திரிகையில் சாஸ்த்ரார்த்த சந்திரிகையின் ஒரு இதழ் ஸ்ரீ ஸ்வாமி நியமனத்தினால் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதில் தத்வப்ரகாச பராமர்ச மென்றும், தத்வதீபிகாவிமர்ச மென்றும் இரண்டு சிறு நூல்கள் அவதரித்திருக்கின்றன. இவையிரண்டும் ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமியின் திவ்யாஜ்ஞையினால் தோன்றியவை யென்று தெரியவருகிறது இவற்றை அடியேன் யாத்ருச்சிகமாக வாசித்துப் பார்க்க நேர்ந்ததனால் பலபல அபூர்வ விஷயங்களைத் தெரிந்து கொள்ளும் பாக்கியம் பெற்றேன். வாதப்ரதிவாத விஷயங்கள் எல்லாமுமே வெறுப்பை யுண்டு பண்ணமாட்டா. ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமி மிகப் பெரிய சாஸ்த்ரஜ்ஞர். சாந்தியே வடிவெடுத்தவர். அப்படிப்பட்ட மஹாஸ்வாமி யெழுதியருளின சிறுக்ரந்தத்தில் எவ்விதமான நிந்தையும் பரிஹாஸமும் அடியோடு இல்லாமல் விஷய விசாரமே சிறந்திருக்கின்றது. அதற்கு ஸ்ரீ P. B. A. ஸ்வாமி கூறியுள்ள உத்தரங்களும் அதையடியொற்றியே விஷய விசாரப்ரதானமாகவே அமைந்திருக்குமழகும் ஆச்சர்யமானது. வித்வான்களுக்குள் இவ்விதமான ஸம்பாஷணை ஏற்பட்டால் உலகுக்கு மிகவும் க்ஷேமமென்று அடியேன்போல்வார் கருதவேண்டியிருக்கிறது. இவ்விரண்டு ஸ்வாமிகளுக்கும் க்ரந்த ரூபமான ஸம்பாஷணை இப்படியே மேன்மேலும் வளர்ந்து செல்லவேணுமென்றும் பிரார்த்திக்க வேண்டியிருக்கிறது. ஸ்வாரஸ்யமான விஷயங்கள் வெளி வருவதற்கு ஹேதுவாயிருப்பது பற்றியே.

பத்தெட்டு மாதங்களாய் மடத்து விவாதமென்று ஒரு விவாதம் தோன்றி மிகவும் விபரீதமான முறையில் அது வளர்ந்து செல்லுகின்றது. எம்பெருமானுக்கு இதுவும் ஒரு லீலை போலும் என்றுதான் தோன்றுகின்றது. இந்த விவாதத்திலும் இரண்டு தலையிலிருந்தும் நல்ல ரஸகனமான விஷயங்களே வெளி வந்துகொண்டிருந்தால் இதற்கும் நாம் மங்களாசாஸனம் செய்யலாம். ஸமீபகாலத்தில் ஓர் ஸத்யவாதியென்று கையொப்பமிட்ட வொருவர் வெளியிட்ட நான்கு பக்கமுள்ள பத்ரிகையொன்று நமக்கும் காணக்கிடைத்தது. அடியோடு விஷயமில்லாமல் நிந்தைகளே மலிந்திருக்கிறது. எழுதினவர் தம் பெயரை மறைத்ததோடு அச்சுக்கூடத்தின் பெயரையும் வெளியிடாது மறைத்திருக்கிறார். இத்தகைய பிரசுரங்களினால் என்ன லாபமாகுமென்பதைச் சிறிதும் கவனியாமலிருக்கிறார்கள். அடியோடு படிப்பில்லாதவர்கள் எழுதின பத்ரிகையல்ல. கல்விப் பயிற்சியுடையவர்களே யெழுதினதென்று தெரிகிறது. அன்னவர்கள் தங்களது விவேக சக்தியையும் ஒளித்துக் கொள்ளுகிறார்களே யென்பது பற்றித்தான் மிக வருந்தவேண்டியிருக்கிறது. அப்பத்திரிகையைப்பற்றி அடியேன் சில ஸமாதானங்கள் எழுத நினைத்தேன். அதற்குள், ஈட்டு விமர்ச பராமர்ச கர்த்தாவான ஸ்ரீபெரும்பூதூர் ஸ்ரீநிவாஸாசார்ய சிரோமணி ஸ்வாமியே ஸத்யவாதி ஸமாச்வாஸமென்று பதிலுரை அச்சிட்டு ஸ்ரீராமாநுஜன் காரியாலயத்திற்கு அனுப்பிவைத்தார். அது அறிஞர்கள் அவசியம் கண்டு களிக்கத்தக்கதென்று நமக்குத் தோன்றினமையால் அதுவும் இதில் சேர்த்துப் பிரசுரம் செய்யப்படுகிறது. இவற்றையெல்லாம் ரஸிகர்கள் உற்று நோக்கி ஸாராஸார விவேசனம் செய்யவேணுமென்பது அடியேனுடைய வேண்டுகோள். நாலு வரி யெழுதினாலும் உலகுக்கு அபூர்வமான விஷயம் ஏதாவது தெரியும்படியிருந்தால் நலமாயிருக்கும்.

---

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்.

ஆழ்வாரெம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# சாஸ்த்ரார்த்த சந்த்ரிகை 27.

# தத்த்வ ப்ரகாச பராமர்சம்.

ஆசிரியர்:—ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் **அண்ணங்கராசாரியர்.**

[illegible]
[illegible]

## அவதாரிகை.

1. சிலமாதகாலமாக நாம் சாஸ்த்ரார்த்த சந்திரிகையை வெளியிட்டிலோம். ஏனென்னில், விவாத விஷயங்களுக்கு விடையிறுப்பதற்கென்றே இந்த சந்திரிகை ஆரம்பிக்கப் பட்டது; நாலைந்து மாதங்களுக்கு முன்பு ஸ்ரீரங்கத்தில் ஸத்ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷிணீ ஸபை யொன்று ஸ்தாபித்த மஹான்கள் இனி அடியேனுக்கு இப்பணியில் சிறிதும் ப்ரவ்ருத்தி கூடாதென்றும் தாங்களே ஆவன செய்து போருவது திண்ணமென்றும் தெரிவித்திருந்த படியாலும், அம்மஹான்கள் அப்படியே ‘அழகியமணவாளன்’ பத்ரிகை மூலமாக ஆவ்ன செய்துவருகிறபடியாலும் நமது சந்திரிகை விராமமடைந்திருக்கட்டு மென்றெண்ணியே நிறுத்தியிருந்தேன். அப்படியிருந்தும் இந்த ஸஞ்சிகை அவசியம் வெளியிட ப்ராப்த மாகிறது. எதனாலென்னில்; ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமி தத்த்வ ப்ரகாசமென்றும் தத்த்வதீபிகையென்றும் இரண்டு சிறு க்ருதிகளைக் கொண்டுள்ள ஒரு புத்தகத்தையச்சிட்டுப் பரமக்ருபையுடன் அடியேனுக்கு இன்று (17—7—52) அனுப்பி யருளினர். ப்ரணதிசாலிநா மௌலிநா பரிக்ரஹித்து முழுதும் ஸேவித்தேன். ஸ்ரீஸ்வாமிக்குப் பல சிஷ்யர்களுண்டு; அவர்களுள் யாருக்காவது நியமித்து அவர்மூலமாக இக் கண்டனப்பணியைச் செய்வித்திருக்கலாம். மிகவும் லகுவான விஷயத்தில், ஜ்ஞானசீல வயோ வ்ருத்தரும் உத்தமாச்ரமியுமான தாமே நேராக நின்று எழுதியிருக்க ஆவச்யகதை யில்லை. “இப்புத்தகம் கிடைக்குமிடம். ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமி ஆச்ரமம். ஸ்ரீரங்க ராஜவீதி சின்னக் காஞ்சீபுரம்” என்று வெளியிட்டு; (புக்போஸ்டு கட்டுதல், ஸ்டாம்பு ஒட்டுதல் முதலியனவும் தாமே செய்தருளினதாகவும் காட்டி) இவ்வளவு ப்ரயாஸம் கொண்டது ஏனென்று ஆலோசிக்குமிடத்து, அடியேன்பால் ஸ்ரீஸ்வாமிக்கு நெடுநாளாகவுள்ள அபரிமிதமான க்ருபையே இவ்வளவுக்கும் காரணம்போலும் என்று கொள்ளலாகிறது. சிஷ்யர்களில் யாரையாகிலும் எழுத நியமித்தால் அவர்கள் வீணை வ்யக்தி தூஷணங்களையே விரித்து விஷய நிரூபணங்களில் விப்ரலம்பமே செய்துவிடுவர்களென்று கருதியும், * விவாதச்ச விவாஹச்ச ஸமயோ ரேவ சோபதே* என்று திருவுள்ளம்பற்றியும் ஸ்வாமி தாமே ஸாக்ஷாத்தாக இக்கண்டனத்தில் கைவைத்தருளினது பாவியேனுடைய பரமபாக்யம்! அல்லது உலகுக்கே ஒரு பெரிய பாக்யம் என்னத்தட்டில்லை.

2. உண்மையில் ஜ்ஞானவைராக்ய நிதியான ஸ்ரீஸ்வாமி மற்ற பண்டிதர்களைப்போல் வ்யக்தி தூஷணம் வ்ருதா பரிஹாஸம் என்பவற்றைச் சிறிதும் புகவிடாமல் விஷய விசாரத்தளவிலே நின்றிருப்பதானது மிகவும் போற்றத்தக்கது. இக்காலத்தில் இப்படி ஸாத்விக ஸரணியில் எழுதுமவர் ஸ்ரீஸ்வாமியைத்தவிர வேறொருவருமில்லையென்று கூசாது கூறலாம். திருவுள்ளத்தினுள்ளே கோபதாபங்கள் கனக்க இருந்தாலும் அவற்றை வெளிக்காட்டாமல் அடக்கி விவக்ஷிதாம்சங்களை மாத்திரம் வெளியிட்டு நிற்பதென்பது சாலவும் புகழத்தக்க பெருங்குணமல்லவா?

3. ஸ்ரீரங்கம் ஸத்ஸம்ப்ரதாய ஸம்ரக்ஷிணீ ஸபாபண்டிதர்களே தங்கள் ப்ரதிஜ்ஞையின்படி இந்த க்ரந்தத்திற்கும் விடையிறுக்கக்கூடும். ஆனாலும், பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி ஸ்ரீஸ்வாமி தாமே இவ்வளவு மஹாக்ருபை செய்தருளியிருக்கும்போது நாமே சிறிது கிஞ்சித்கரித்து ஸ்வரூபம் நிறப்பெறுவதுதான் உற்றது என்றெண்ணியே இந்த சந்த்ரிகா ஸஞ்சிகையை அடியேனே அவதரிப்பிக்கின்றேன். ஸ்வாமிக்கு நேரான ப்ரதிவாதியாக அடியேன் நிற்க ஸர்வாத்மநா யோக்யனல்லேனாயினும் ஸ்வாமிதாமே அடியேனை நிறுத்தியருளினபடியாலும், தமது புத்தகத்தின் முடிவில் (பக்கம் 23ல்) "நாம் சொன்ன தூஷணத்தை இவர் பரிஹரித்தே தீரவேண்டும். பரிஹரித்தே தீரவேண்டும். பரிஹரித்தே தீரவேண்டும்" என்று ஒருவிசைக்கு மூன்று விசையாக நியமித்தும், "...... [illegible] ..." என்று தமது உத்கடமான உத்கண்டையைக் காட்டியுமிருக்கையாலும் ஸ்ரீஸ்வாமிக்கு அடியேன் ப்ரதிவாதியாக நிற்க ப்ராப்தமாயிற்று. உண்மையில் ஸ்ரீஸ்வாமி திருக்குணங்களில் அடியேன் மிகவுமீடுபட்டவன். ஸ்ரீஸ்வாமியும் * [illegible] னை அடியேன்பால் அந்யாத்ருசமான திருவருள் நிரம்பியவர். ஆக இவ்விரண்டு தன்மைக்கும் பொருத்தமாக அபசாரோக்தி அணுவளவும் புகக்கூடாதென்கிற ஸத்யமான ப்ரார்த்தனையோடும் ப்ரதிஜ்ஞையோடுங்கூட இந்த உத்தரம் விஜ்ஞாபித்துக் கொள்ள எழுகின்றேன். ஸ்ரீஸ்வாமியின் மஹாக்ருபையை மேன்மேலும் வளர்த்திக் கொள்வதற்கே யுறுப்பாகுமித் தொண்டு.

4. ஸ்ரீஸ்வாமி இப்போதருளிய புத்தகத்தில் தத்த்வப்ரகாசமென்பது முதல் க்ருதி. தத்த்வ தீபிகையென்பது இரண்டாவது க்ருதி. முந்தினது ஸம்ஸ்க்ருதபாஷையில் பதினெட்டு பக்கங்கொண்டது. பிந்தினது மணிப்ரவாள பாஷையில் இருபத்துமூன்று பக்கங்கொண்டது. முந்தினக்ருதியைப்பற்றி முன்னம் விமர்சிப்போம். ஏழு வருஷங்களுக்கு முன்பு ஸ்ரீஸ்வாமி பாடசோதநமென்றொரு க்ரந்தமெழுதி தேவநாகரலிபியில் அச்சிட்டு வெளியிட்டிருந்தார். ஸ்ரீபாஷ்யம் கீதாபாஷ்யம் முதலான ஐந்தாறு க்ரந்தங்களில் அச்சுப்பிரதிகளில் வழங்கிவரும் பாடங்களில் பலவற்றை மாறுபடுத்தி இப்படித்திருத்தியே யாகவேண்டுமென்று பலபல திருத்தங்களைச் செய்திருந்தார். ஸ்ரீமதித்யாதி. உ. வே. நாவல்பாக்கம் ஸ்வாமி போன்ற மஹான்கள் அதைக் கடாக்ஷித்துத் திருவுள்ளம் புண்பட்டு 'இப்படியும் யதேச்சமாகத் திருத்திவிடலாமா?' என்று ஸாதிக்க நேர்ந்தது. ஸ்ரீ. உ. வே. நாவல்பாக்கம் வித்வான் தேவநாதாசாரியர் ஸ்வாமி பாட சோதநக்ரந்தத்திற்கு மறுப்பாக வொரு க்ரந்தம் எழுதியிருந்ததாகவும் கேள்வியுண்டு. அது நிற்க.

5. ஸ்ரீஸ்வாமியின் பாடசோதநத்தை அடியேன் ஆராய்ந்தபோது அதன்மேல் ஒன்று எழுத வேண்டியது ஆவச்யகமேயென்று தோன்றி பாடசோதந பரீக்ஷா என்கிற க்ரந்தமொன்றை வடமொழியிலே யியற்றி [அதன் முதற்பகுதியை] அடியேனுடைய வைதிக மநோஹரா பத்ரிகையின் மூலமாக அப்போதே வெளியிட்டிருந்தேன். [அதாவது, பார்த்

திவஹ ஆடி மாதத்தில்.] இப்போது ஏழு வருஷங்களான பிறகு இதைப்பற்றின சர்ச்சை தோன்றியுள்ளது. அடியேனுடைய அந்த பரீக்ஷா க்ரந்தத்திலுள்ள பல விஷயங்களை விட்டுச் சில விஷயங்களைப்பற்றி ஸ்ரீஸ்வாமி விசாரித்தருளுகிறார்.

அடியேனுடைய பரீக்ஷாக்ரந்தம் வெளிவந்த போதே ஸ்ரீஸ்வாமியின் சிஷ்யர்களுள் தலைவரும் சிறந்த அபிஜ்ஞருமான ஸ்ரீ. உ. வே. உத்தமூர் வீரராகவாசாரியர் ஸ்வாமி ஸ்ரீகாஞ்சீ. தேவப்பெருமாள் ஸன்னிதி நூற்றுக்கால் மண்டபத்தில் இதைப்பற்றி வித்வான் களின் முன்னிலையில் வாக்யார்த்த சர்ச்சை நடைபெற வேணுமென்று கருதி ப்ரகடந பத்ரிகை மூலமாய் அடியேனுக்கு ஆஜ்ஞாபித்திட்டார். அப்படியே வித்வத் ஸதஸ்ஸு நடந்தது. அதில் மத்யஸ்தபதவியை வஹித்த வித்வான்களுள் ஸ்ரீ. உ. வே. அய்யா க்ருஷ்ணதாதாசார்ய ஸ்வாமியும் இளங்காடு ரங்காசார்ய ஸ்வாமியும் அப்போது என்ன தீர்ந்ததென்பதை உள்ளபடி உரைக்க வல்லவர்களாயுள்ளார்கள். அந்த உத்தமூர் ஸ்வாமி செய்த சோத்யங்களுக்கு நாம் விடை கூறினோம். அதன் மேல் அவர் ஒன்றும் சொல்லாது எழுந்து சென்றார். இவ்வளவே நடந்த விஷயம். இதுவும் அப்போதே பத்ரிகைகளில் பிரசுரமாகியிருக்கிறது- ஸம்ஸ்க்ருத பாஷையிலமைந்த அடியேனுடைய பரீக்ஷா க்ரந்தத்தை ஸ்ரீ அஹோபில மடத்து ஸ்வாமிகள் மிகவுகந்து தமிழில் மொழிபெயர்ப்பித்து ந்ருஸிம்ஹ ப்ரியாவில் வெளியிடவும் தொடங்கினர். ஒரு பகுதி வெளிவந்தது. இந்த விவாதம் வளரத்தகாதென்று கருதிய மஹநீயர்கள் நிறுத்தி வைத்தார்கள். *ஏதத் தத் புநரபி தைவதுர் விபாகாத் ஆலர்க்கம் விஷமிவ ஸர்வத: ப்ரஸகதம்* என்று பவபூதி சொன்ன கணக்கிலே ஏழு வருஷம் பொறுத்து இப்போது இந்த விவாதம் புநருந்மிஷிதமாகியிருக்கிறது. இந்த ஸஞ்சிகையோடு இது சாந்தமாகுமென்ற நம்பிக்கையுள்ளது. மேன்மேலும் வளர்ந்து சென்றாலும் *துர்விஜ்ஞாந ஸ்வஹ்ருதயமஹோ தைவமத்ர ப்ரமாணம்* என்ற தேசிக திவ்ய ஸூக்தியே நினைக்கலாகும்.

6. ஸ்ரீஸ்வாமியின் பாடசோதந நூலின்மீது அடியேன் எத்தனைவிதமான அவத்யங்கள் தெரிவித்திருக்கிறேனென்பதை இங்குச் சுருக்கமாக நினைப்பூட்டுகிறேன். (1) ஸ்வாமி அவசியம் சோதிக்கவேண்டிய பாடங்களைத் தொடாமலே விட்டிட்டாரென்பதை ஐந்திடங்களில் நிரூபித்தேன். (2) முன்னமே அச்சில் வெளிவந்திருக்கிற திருத்தங்களையே வீணாகத் தாம் செய்கிறாரென்பதைப் பன்னிரண்டிடங்களில் விளக்கினேன். (3) அவச்யமற்ற திருத்தங்களைச் செய்திருக்கிறாரென்பதையும், (4) ந்யாயவிரோதம் யுக்தி விரோதம் ச்ருதப்ரகாசிகாதிவ்யாக்யாநவிரோதம் முதலிய காரணங்களினால் மஹான்கள் வலிதாக ஆக்ஷேபிக்கக் கூடிய திருத்தங்களைச் செய்திருக்கிறாரென்பதையும். (5) அவசியம் திருத்தவேண்டுமிடங்களில் பண்டே திருத்தி வெளியிட்டிருப்பதை நோக்காமலோ அல்லது திரஸ்கரித்தோ அவ்விடங்களில் தாம் மிகவும் விரஸமான திருத்தத்தைச் செய்திருக்கிறாரென்பதையும், (6) ச்ருதப்ரகாசிகை பாவப்ரகாசிகை மற்றும்பலவற்றை ஆழ்ந்து பரிசீலனை பண்ணாமலே ஸஹஸா எழுதியிருக்கிறாரென்பதையும் பல விடங்களை எடுத்துக்காட்டி மூதலித்திருக்கிறேன். இன்னின்ன பாராக்களில் இன்னின்ன விதமான அவத்யங்களை விவரித்திருக்கிறேனென்று பரீக்ஷாக்ரந்தத்தின் முகப்பிலேயே ஒரு கண்ணாடி காட்டியிருக்கிறேன். மொத்தம் 72 பாராக்களிட்டு விஷயநிரூபணங்கள் செய்திருக்கிறேன். முடிவில் "[illegible] ப்ரேம் ... ஸம்ப்ரஹ்ருதே ஸதாகுணாய விவேகிநாம் ॥ ஸ்ரீகோஷ்டியாம் ... வீக்ஷ்யாஹம் ப்ரகாசயிதும் [illegible] ॥" என்று தொடங்கி நூறு ச்லோகங்கள் பரீக்ஷாக்ரந்த ஸார ஸங்க்ரஹமாக இட்டி-

ருக்கிறேன். இவற்றுக்கெல்லாம் வரியடைவே விடையிறுக்க ஸ்ரீஸ்வாமி கடமைப்பட்டிருந்தும் ந்யாய்யமான ஸரணியைவிட்டு இடையிடையே சிலவிஷயங்களை மாத்திரம் எடுத்துக்கொண்டு விசாரம் செய்தருளியிருக்கிறார். எல்லா விஷயங்களையும் தொட்டு விசாரம் செய்தருளாததற்கு முடிவில் மூன்று விதமான திருவுள்ளம் தெரிவித்திருக்கிறார். (1) மற்ற விஷயங்களும் துல்யந்யாயாத் உத்தோத்தரமாய்விட்டதாகவும், (2) பல விஷயங்கள் ஜாப்ஸாவஹங்களாய் அநுவாதத்திற்கும் அநர்ஹங்களாயிருந்தமையால் விட்டிட்டதாகவும், (3) சில விஷயங்கள் மிகச்சிறியவையென்று தள்ளிவிட்டதாகவும்.

7. இங்கு ஸவிநயம் ஒரு விஷயம் விஜ்ஞாபிக்கிறேன். ஸ்ரீஸ்வாமியின் பாடசோதநத்தில் "44. சுஜாஸ்வாயிகாணெ *ஸெளவஹீ த்யாதிவாக்ஷெஷு 'நவ வயொாநயொ' ரிதி வாகெ்யு வாநாவி வயொரிதி ஊாதி தம் 'வஃம் நயா்தூ.'" என்றெழுதப்பட்டிருந்தது. இதற்கு அடியேனுடைய பரீக்ஷாக்ரந்தத்தில் அவ்விடத்து ச்ருதப்ரகாசிகாபங்க்தியை யெடுத்துக்காட்டி (அதாவது) "லூயஃம்வயொாரிதிவஃம் வாகூவாழ; ஷிதீயம்தா உவாஸ நவாழ" என்று ஸுஸ்பஷ்டமாகவுள்ள ஸூக்தியை யெடுத்துக்காட்டி த்வயோ: என்று இருமுறையிருப்பது தூஷிக்கத்தக்கதன்று என்று நிரூபித்திருக்கிறேன். இவ்விடத்தில் ஸ்ரீஸ்வாமி என்ன செய்திருக்கவேண்டும்; 'ச்ருதப்ரகாசிகையைப் பாராமலே ஸஹஸா ஸ்ரீபாஷ்யத்தை தூஷித்துவிட்டேன்; தவறுதான் இதற்காகமிகவும் சோகிக்கிறேன்' என்று அநுதாபம் காட்டியெழுதியிருக்கவேண்டும். இங்ஙனே பலவிடங்களுக்கு அநுதாபம் காட்டவேண்டியது ஆவச்யமாயினும் ஒரிடத்திற்காவது காட்டியிருந்தால் ப்ராமாணிகத்வம் பொலியும். அஃதில்லையே. இது துல்யந்யாயாத்தத்தோத்தரம் என்ற வகுப்பிலே சேர்ந்ததா? ஜாஹாலூாவஹம் சுநா வதிதாவெ்யு நஹாஷிதா்யா ஃபெக்ஷிதமென்ற வகுப்பில் சேர்ந்ததா? ஹூாதராஊதி நஷூ்ஷா: என்ற வகுப்பில் சேர்ந்ததா? ஸ்வாமியின் திருவுள்ளமென்கொல்? ப்ராமாணிக ஹ்ருதயங்கமமாக ஈதொன்றுக்கு விடையருளிச்செய்யவேணும். ஸ்ரீபாஷ்யத்தோடு கூடவேயிருக்கிற ச்ருதப்ரகாசிகையைக்கூட விமர்சியாமலே 'அதைத் தள்ளவேண்டும், இதை யெடுக்கவேண்டும், அதையடிக்கவேண்டும், இதை யொடிக்கவேண்டும்' என்று ஸ்வச்சந்தமாக ஸ்வாமியெழுதியிருப்பது ஸாஹஸந்தானென்று ப்ராமாணிகவிவேகிகள் இப்போது எளிதாகத் தெளியலாமன்றோ.

8. ஸ்ரீ ஸ்வாமியின் தத்வப்ரகாசத்திலுள்ள விஷயங்களை இனி விமர்சிப்போம். ஸ்தோத்ரபாஷ்ய சோதனங்களை முதல் விஷயமாக எடுத்துக் கொண்டிருக்கிறார் ஸ்வாமி. ஸ்தோத்ர பாஷ்யத்தில் ஐந்து திருத்தங்களை ஸ்வாமி தாம் காட்டியிருந்தாராம். அவற்றில் இரண்டு திருத்தங்களைப்பற்றியே நாம் பரீக்ஷாக்ரந்தத்தில் மறுப்புரைத்திருக்கிறோமாம். மற்ற மூன்று திருத்தங்களைப்பற்றி ஏன் விமர்சிக்கவில்லை என்கிற திருவுள்ளமாக உபக்ரமத்தில் திருவெழுத்து சாத்தியிருக்கிறார். இதற்கு அடியேன் அவச்யம் பதில் கூறக் கடமைப் பட்டிருக்கிறேன். இவ்வொரு விஷயத்திற்கு அடியேன் விடை கூறிவிட்டால் இது பல பல விஷயங்களுக்கும் விடையிறுத்ததாக ஆகுமாதலால் விஜ்ஞாபிக்கிறேன் குறிக்கொண்மின்.

9. ஸ்தோத்ரபாஷ்யத்திலிருந்து ஸ்ரீஸ்வாமி ஐந்து சோதனங்கள் காட்டினதாகத் தெரிவிக்கிறாரே; ஸ்தோத்ரபாஷ்யத்தில் சோதநீய ஸ்தலங்கள் ஐந்தேதானா? ஐந்துக்குமேல் ஒன்றுகூட இல்லையா? இல்லையென்னில், அதைத் திண்ணமாக ஸ்வாமி தெரிவித்தருள வேண்டும். ஐந்துக்குமேல் சோதநீயம் ஒன்றுகூட கிடையாதென்று எழுதிக் கொடுத்து விட்டால், பிறகு சோதநீயஸ்தலங்கள் எத்தனையெடுத்துக் காட்டப்படுமென்பதைக் காணலாம். இன்னமும் பல சோதநீயங்களுண்டு என்னில்; அவற்றை யெல்லாம் ஏன் எடுத்து சோதிக்கவில்லை

யென்று கேட்க ப்ராப்தம். இதற்கு ஸ்வாமி என்ன பதில் ஸாதிக்கும்படியா யிருக்கும்? ஒவ்வோரக்ஷரமாக ஆழ்ந்து சோதிக்க அவகாசமேது? என்றும், ஏதோ தோன்றினவரையில் ஸாத்யமானவரையில் சில சோதனம் காட்டினேனுமத்தனை யென்றும் இவ்வளவே ப்ராமாணிகோத்தரமாக ஸாதிக்கும்படியா யிருக்கும். அடியேன் விஜ்ஞாபிக்கு முத்தரமுமிதுவே.

10. மேலும்; ஸ்தோத்ரபாஷ்யாதி க்ரந்தங்கள் ஒரு பதிப்பாக இல்லை. ஒவ்வொன்றும் அனேகமாய்ப் பல பதிப்புகளேறி யிருக்கிறது. சுத்தியில் வாசிகளுமுண்டு. ஸ்வாமி எந்தப் பதிப்பைக் கையில்கொண்டு சோதனம் காட்டியருளுகிறுரென்பது முக்கியமாக வெளிவர வேண்டும். இது பண்டே வெளி வந்திருக்கவேண்டும். இனியாவது அவசியம் வெளிவர வேண்டும். "முன்னமே அச்சில் வெளிவந்திருக்கிற திருத்தங்களையே வீணுகத் தாம் செய்கிறு" ரென்பதை அடியேனுடைய பரீக்ஷா க்ரந்தத்தில் 11, 28, 30, 32, 56, 38, 39, 40, 45, 46, 47, 48 ஆகிய இத்தனை பாராக்களில் அடியேன் நிரூபித்திருப்பது ப்ரஸித்தம். இப்படி அடியேனெழுத வேண்டிய ப்ரஸக்தி எதனுலேற்பட்டது? இப்போது அடியேன் விரிவாக விசாரித்தால் இந்த விவாதம் மேன்மேலும் முற்றி ஸ்ரீ ஸ்வாமிக்கு வீணை ச்ரமங்களைத் தந்திடுமோ வென்கிற அச்சமுண்டு. இனி விஷயங்களிற் சிறிது சென்று விமர்சிக்கிறேன்.

அவதாரிகை முற்றிற்று.

---

## க்ரந்தாரம்பம்.

11. ஸ்ரீ ஸ்வாமி முதன்முதலாக விமர்சிக்க எடுத்துக்கொண்ட விஷயம் உண்மையில் மிகவும் முக்கியமானது. ஸ்தோத்ர ரத்னத்தில் (45) *அசிந்த்ய திவ்யாத்புதேத்யாதி ச்லோகத்தில் "ச்ரிய: ச்ரியம் பக்தஜநைகஜீவிதம் ஸமர்த்தம்" என்றுள்ளவிடத்தில் எம்பெருமானுக்கு ஸமர்த்தம் என்ருெரு விசேஷணமுள்ளது. க்ஷுத்ரர்களான நாமெல்லாருங்கூட ஸமர்த்தர்களென்று கொண்டாடப்படுகிறேும். எம்பெருமானை ஸமர்த்தனென்றால் அவனுடைய ஸாமர்த்தியம் ஸாமாந்யமா யிருக்கமுடியாதே; இங்கு எவ்விதமான விசேஷத்தைக் காட்டலாமென்று விமர்சித்த பெரியவாச்சான்பிள்ளை ஆளவந்தாருடைய திருவுள்ளத்தை உள்ளபடி யுணர்ந்து தமது வியாக்கியானத்தில்-"[**ஸமர்த்தம்**] அளவுடையூரான நித்யஸூரிகள் அனுபவிக்கும் தன்னை நித்ய ஸம்ஸாரிகள் அநுபவிக்குமிடத்தில் *ஆற்ற நல்லவகை காட்டுமம்மானை* என்கிறபடியே ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிப்பிக்கும் ஸாமர்த்த்யத்தையுடைய உன்னை" என்றருளிச் செய்தார். உண்மையில் எம்பெருமானுக்கு இதுதான் அற்புதமான ஸாமர்த்தியம். இப்பங்க்திகளை ஸேவித்த தேசிகன் இவ்வர்த்தத்தை மிகவும் ரஸித்து இதை அப்படியே மொழி பெயர்த்தவர் போல் "........ஶ்ரித நாம் ஸாத்ம்யபோக ப்ரதாநே" என்று அருளிச்செய்தார். (ஸாத்ம்ய) என்கிற ஸம்ஸ்க்ருதபதம் சிறிது அபூர்வமானது. அமரகோசாதிகளிலே கையாண்டது. நம் ஆசார்யர்களின் திவ்யக்ரந்தங்களில்தான் இந்த பதம் விசேஷமாகக் காணப்படும். திருவாய்மொழியில் (1—9.) *இவையுமவையுமுவையும்* என்கிற பதிகத்தில் எம்பெருமான் ஆழ்வார்க்கு ஸ்வாநுபவத்தை ஸாத்மிக்க ஸாத்மிக்கக் கொடுத்தருளினதாகப் பூருவாசாரியர்கள் வியாக்கியானம் செய்தருளினர். அதையநுஸரித்து தேசிகன் த்ரமிடோபநிஷத்தாத்பர்ய ரத்நாவலியில் "விபுமநுபுபுஜே ஸாத்ம்யபோகப்ரதாநாத்" [விபு மநுபுபுஜே ஸாத்ம்யபோகப்ரதாநாத்] என்றருளிச் செய்தவர். அந்த ப்ரயோகத்தையே இங்குச் செய்தருளியிருக்கிறுர்.

12. பல வருஷங்களுக்கு முன்பு திருவயிந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் ஸ்தோத்ரபாஷ்யத்தை மொழிபெயர்ப்புடன் தாம் அச்சிடுகையில் இங்கே ஸாத்ம்யபதஸ்வ ரூபத்தையும் இதன் பொருளழகையும் தெரிந்து கொள்ளகில்லாமல் "ஸாம்ய போகப்ர தாநே" என்று பழைய பதிப்புகளில் கண்ட அசுத்தியையே ஆதரித்து வெளியிட்டிருந்தார். அதைப்பற்றி அடியேன் விமர்சிக்க நேர்ந்ததனால் அடியேனுடைய மாதப்பத்திரிகையொன் றில் இவ்விஷயத்தை விரிவாக எழுதி * ஸாத்ம்ய போகப்ரதாநே * என்பதுதான் தேசிகன் திருவாக்கில் அவதரித்தபாடம் என்று விளக்கியிருந்தேன். அதைக்கண்ட திருக்குடந்தை. ராயம்பேட்டை. மஹாமஹோபாத்யாய கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி ஆனந்த பரமகாஷ்டை யையடைந்து ஆர்யதர்மபத்ரிகையில் அடியேனுடைய ஆராய்ச்சியை ப்ரசம்ஸித்தும் சேட்லூ ரவருடைய அரஸிகத்வத்தையிகழ்ந்தும் மாத்ஸர்யகந்தமுமில்லாமல் எழுதி வெளியிட்டிருக் கிறார். அந்த பத்ரிகை அழிந்திலது. அத்யாபி ஸுரக்ஷிதம். அந்த க்ருஷ்ணமாசார்யர் ஸ்ரீ கோழியாலம் ஸ்வாமியின் திருவடியே. இந்த யதாவஸ்தித பாடத்தை அடியேன் எடுத் துக்காட்டினதற்காக, அவர் அடியேனிடத்தில் இடையில் கொண்டிருந்த வைரத்தை ஸவாஸந மாக விட்டிட்டு "ஸ்வயம ஜ நஃ ஸ்ரீஜ்ஞ: பூர்ண நிஷ்ப்ரத்யூஹகுணவர்ஷ:" என்று திருமுகம் விடுத்து உள்குழைந்து பரிமாறினர். ப்ரஸங்காத் இவ்வளவும் இங்கு எழுதலாயிற்று.

13. இப்படி ரஸிகவித்வான்கள் உகந்து கொண்டாடநின்ற இவ்விஷயத்திலே ஸ்ரீ ஸ்வாமி அத்யந்தமபிநிவேசத்தோடு "ஸாத்ம்ய என்கிற பதம் இங்கு ஸர்வாத்மநா இருக்கவே தகாது" என்கிறார். இங்ஙனே அபிநிவிஷ்டராய் உறுத்தி யெழுதுவதற்கு என்ன காரண மென்னில், பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியான ஸ்ரீஸூக்தியை யநுஸரித்து தேசிகன் ஸாதித்தாரென்று தேறிவிடுகிறதேயென்கிற அவஸாதமேயாம். இதற்கு யார் என் செய்வது! தேசிகன் த்ரமிடோபநிஷத் தாத்பர்யரத்நாவலியருளிச் செய்தபோது பெரியவாச்சான்பிள்ளை யின் இருபத்திநாலாயிரப்படியையே தழுவிப் பெரும்பாலுமருளிச் செய்திருக்கிறாரென்பதை அவிஅால்யமாக ஸஸாக்ஷிகமாய் நிரூபித்திருக்கிறோம். அது நிற்க. ஸ்தோத்ரபாஷ்யத் தையே யெடுத்துக்கொள்வோம். ஒவ்வொருச்லோகத்தின் பாஷ்யத்தையும் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தை உடன் கொண்டு ஸேவித்தால், அவருடைய வியாக்கியான ஸரணியை தேசிகன் எவ்வளவு தழுவியிருக்கிறார் என்பது அநாயாஸமாக விளங்கும். *நமோ சிந்த்யாத்புத* என்கிற முதல் ச்லோகத்திலிருந்தே பார்க்கலாம். பெரியவாச்சான்பிள்ளை உதாஹரித்தருளுகிற ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களை நூற்றுக்கு எண்பது பங்கு விடுவதில்லை தேசிகன். இது அநுமாநமன்று, உத்ப்ரேக்ஷையன்று, உல்லேகமன்று. இரண்டு ஸ்ரீகோ சங்களும் ஸுலபமேயிறே. துர்லபமன்றே. எடுத்துப் பரீக்ஷிக்கலாமே. ப்ரமாணங்களைக் கொள்வது மாத்திரமேயன்று. பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திற்காணும் இன் சுவைமிக்க பொருள்களை அப்படியே தழுவிக்கொள்வதையும் காணலாம். இதற்கு நூறிடங் கள் எடுத்துக்காட்டலாம்; ஆயினும் இங்குச்சிலவிடங்களையே காட்டுகிறேன்; முதல் ச்லோ கத்தில் * ஜ்ஞாந வைராக்யராசயே * என்றவிடத்தில் வாரிராசி:, ஜலராசி: இத்யாதி ஸ்தலங்க ளிற்போல ஜ்ஞாநவைராக்யங்களுக்கு ராசியாயிருப்பவர் என்கிறபொருளே எல்லார்க்கும் தோன்றக்கூடியது. இது ஸங்கதமான பொருளேயன்றி அஸங்கதமான பொருளன்று. இவ்வகைப்பொருளை முந்துறப் பணித்தார்தேசிகன்; இங்கே பெரியவாச்சான்பிள்ளை பஹுவ்ரீஹியை விவக்ஷித்து, ராசி யென்பதற்கு ஸமூஹப்பொருளைக் கொண்டு ஜ்ஞான ஸமூஹங்களையும் வைராக்ய ஸமூஹங்களையு முடையவர் என்றுரைத்து, ஜ்ஞாநமும் வைராக் யமும் ஒன்றாயிருக்க ராசியென்னலாமோவென்று சங்கித்துக்கொண்டு 'பகவத் ஸ்வரூபாதி கள் ஜ்ஞான விஷயங்களாகையாலே பல; த்யாஜ்ய விஷயங்களும் பலவாகையாலே வைராக்

யங்களும் பலவென்று சொல்லலாம்' என்று அருளிச் செய்திருக்கிறார். தேசிகன் பாஷ்யத்தில் இதை அப்படியே மொழி பெயர்த்திருக்கிறார்; "அதிக்ருதாதிவிஶேஷாத் ஜ்ஞாநவைராக்யராஶீ யஸ்யேதி பஹுவ்ரீஹிர்வா; ததா ச ஜ்ஞாநவைராக்யயோ: ப்ருதக்த்வம் விஷயாநந்த்யேந ஹேதுநா ஸம்பந்தாய ராஶித்வோக்தி:" என்பது தேசிக ஸூக்தி.

14. மேலே * அகாதபகவத் பக்திஸிந்தவே * என்றவிடத்திலும் பக்திக்குக் கடலாயிருப்பவர் என்று பொருள் கொள்ளாமல், * காதல் கடல் புரைய விளைவித்த * காதல் கடலின் மிகப்பெரிதால்* இத்யாதி திவ்ய ஸூக்திகளுக்குச்சேர பக்தியைக் கடலாக ரூபித்து அகாதமான பகவத் பக்திஸிந்துவையுடையவர் என்று உரைத்தார் பெரியவாச்சான் பிள்ளை; தேசிகன் அதைத்தழுவி "பக்திம்வா ஸிந்துத்வேந ரூபயித்வா பஹுவ்ரீஹி:" என்று பணித்தார். * ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே * என்றவிடத்தில் லோகே என்பதற்கு (ஸம்ஸாரி ஜநே) என்று முதலில் ஸாமாந்யமாகப் பொருள் பணித்த தேசிகன் (லோகே—சாஸ்த்ரத்தில்) என்றுள்ள பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தை ஸேவித்து 'அதவா, லோக்யதே அநேநேதி லோக:—ப்ரமாணம்; தஸ்மிந். அத்ர ஶாஸ்த்ரரூபப்ரமாணே விஶேஷ விவக்ஷா," என் றருளிச்செய்தார்.

15. * வசீ வதாந்யோ குணவாந் * என்ற ச்லோகத்தில் அநுபவிக்கப்பட்ட பன்னிரண்டு திருக்குணங்களையும் விவரித்தருளாநின்ற தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தையே ப்ராயேண மொழிபெயர்த்திருக்கின்றார். இப்படி அதுவிதுவுதுவென்று எடுத்துக்காட்டவேண்டுமோ? ச்லோகந்தோறும் நியதமாகவே காணலாம். அவ்வளவுதூரம் போவானேன்? ப்ரக்ருத ச்லோகத்தையே யெடுத்துக்கொள்வோம். அதாவது (ஸாத்ம்ய போகப்ரதாநே) என்கிற விவாதாஸ்பதமான பதம் எந்தச்லோகத்தின் வியாக்கியானத்திலுள்ளதோ அந்த * அசிந்த்யதிவ்யாத்புதேத்யாதி ச்லோகத்தையே கொண்டு உபய வியாக்கியானங்களையும் பரிசீலிப்போம். இந்தச்லோகத்திற்குப் பெரியவாச்சான் பிள்ளை இட்டருளின அவதாரிகையையே சிறிது பெருக்கி மொழிபெயர்த்திருக்கிறார் தேசிகன். பக்தஜநைக ஜீவிதம் என்பதற்கு—பக்த ஜநங்களுக்கு தாரகாதிகளெல்லாம் தானேயாயிருக்குமவன் என்றும், பக்த ஜநங்களையே தனக்கு தாரகமாகவுடையவன் என்றும் இரண்டு விதமாகப் பொருள் பணித்தார் பெரியவாச்சான்பிள்ளை; தேசிகனும் அப்படியே "பக்தஜநாநாம் ப்ராணா ஜீவிதம். யத்வா பக்தஜநா ஏவ ஜீவிதம் யஸ்ய ஸ ததோக்த:." என்று பாஷ்யமிட்டருளினர். இதற்கு அடுத்தது ஸமர்த்தம் என்பது. இதற்கும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை யநுஸரித்தே பாஷ்யமுள்ளதென்று கீழே உபபாதித்தோம். இங்கு வேறுவிதமாக தேசிகஸூக்தியிருக்க ஔசித்யலேசமுமில்லையன்றோ.

16. இதற்குமேல் ஸ்வாமிபோல்வார் ஸாதிக்கக்கூடியதொன்றுண்டு; பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானத்தைத் தழுவி தேசிகன் வியாக்கியானம் அவதரித்ததென்று ஏதுக்கு இசையவேண்டும்? தேசிக வியாக்கியானத்தை அநுஸரித்தே பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானித்தார் என்கிறோமென்று. இப்படிச்சொல்ல நெஞ்சாலும் நினைக்க முடியாதபடியன்றோ தேசிகனுடைய ஸ்தோத்ரபாஷ்யம் அமைந்திருக்கிறது. இடையிடையே பெரியவாச்சான்பிள்ளையின் ஸ்ரீஸூக்திகளுக்கு அபிப்ராய வர்ணநம் செய்தருளுகிறார்; சிலவிடங்களில் மறுப்புமெழுதுகிறார். இரண்டுக்கும் இரண்டிடமே காட்டுவோமிங்கு. * மம நாத யதஸ்தி * என்ற ச்லோகத்திற்கு அவதாரிகையிடுகின்ற பெரியவாச்சான்பிள்ளை, "பண்ணின ஆத்மஸமர்ப்பணத்தை அநுசயிக்கிறார்" என்றருளிச்செய்து, மேலே ச்லோக

வியாக்கியானத்தின் முடிவிலும் “ ஸம்ஸார பீதியாலே ஸமர்ப்பிக்கையும் ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞானத்தாலே அநுசயிக்கையுமாக இரண்டும் யாவந்மோக்ஷம் அநுவர்த்திக்கக்கடவது.” என்று தலைக்கட்டினார். இங்கு ஸ்தோத்ரபாஷ்யத்தில் “ சுத வஙுவ-ஜகூ தவூா தூவை வஷுணா நூஙுஸுயெந தஜெவ வூதிக்ஷிவதூஜ திவக்ஷவூ சவூதிப ஙா நா ஐா வை வஷுண ஹிலெஷூதெஜா க்ஷி: என்று அபிப்ராயவர்ணனமுள்ளது.

17. *தத்த்வேந யச் சிதசிதீச்வரதத்ஸ்வபாவ போகாபவர்க்க * என்றவிடத்தில் கைவல்ய மோக்ஷத்தையும் அபவர்க்க சப்தார்த்தமாக இட்டு வியாக்கியானித்தருளினர் பெரியவாச்சான்பிள்ளை; தேசிகன், அதற்கு முந்தியுள்ள ஹொஜ பதத்திற்கே ‘கைவல்யத்தையும் அர்த்தமாக்கியுரைத்து (அதாவது) “ ஹொஜஊஹ வூஜ ஜவாஸா ஜூஷிவஙுவா நூஹவ: வூா ா ந ஜா நூஹவஹ ” என்றுரைத்து, உடனே “ தவூிஙு ஐ ஙுக்ஷிஸுபம் கெஷிஜ ஙுவ அஸுஷி ” என்று தொடங்கி விவரண ஙுவெந மறுப்பு முரைத்தார். ஆக இவ்விமர்சம் செய்ய வல்லவர்கள் ஸ்தோத்ர பாஷ்யத்திற் காட்டிலும் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமே மிக முற்பட்டதென்று முழுமனமாக இசைந்திடுவார்கள். பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செயல் வியாக்கியானங்களை ஙவைவ நமாக அருளிச் செய்தவராகையாலே அந்த ப்ரணளியை அவர் ஸ்தோத்ர வியாக்கியானத்திலும் ஆங்காங்கு இணக்குகிறார்; இதையும் தேசிகன் அப்படியே கைப்பற்றுகிறார். இதற்கும் ஓரிடம் காட்டுகிறேன். *(54) அவபோதிதவாந் இமாம் யதா* என்றவிடத்தில் இமாம் என்பதற்கு (இந்த) என்னுமிவ்வளவே பொருள் சொல்லக்கடவர்கள் கேவலஸம்ஸ்க்ருத வித்வான்கள். பெரியவாச்சான்பிள்ளையோ வென்னில்; “ இமாம் என்று சேஷத்வத்தில் இனிமையாலே கொண்டாடுகிறார் ” என்று இன்சுவைப் பொருள் பணித்தார். தேசிகன் இச்சுவையில் மிக ஈடுபட்டு “ ஊஜாழ—ஊஜஷவ ஙுவ-ஜ தயா சஷூ ஙுதவுெந வூாஜ ஙுதயா சநூஹஙுயஜாநாழ ” என்று விலக்ஷணமான தஜநூவாஜத்தைச் செய்தருளினர்.

18. அடியேன் ஒரு ஸமயம் உபய வியாக்கியானங்களையும் யஙுஜவஙு பதம்பதமாக விவரித்து பிரவசனம் செய்ய பாக்யம் பெற்றேனுதலால் இவ்வாராய்ச்சிகளை இன்றுகச் செய்யாமல் பண்டே செய்துவைத்திருக்கிறேன். பெரியவாச்சான்பிள்ளையின் வியாக்கியானங்களை ஸேவித்ததனுல் தேசிகனுக்கு விலக்ஷணமானவொரு ராஸிக்ய முண்டாயிருக்கிறதென்பதை அடியேன் விஜ்ஞாபியாமலிருக்கமுடியவில்லை. ஸ்தோத்ரபாஷ்யத்தில் ஆதரமுடையார் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தை வெறுப்பவர்களாயும், அதில் ஆதரமுடையவர்கள் ஸ்தோத்ரபாஷ்யத்தை வெறுப்பவர்களாயுமே பெரும்பாலுமுள்ளார்கள். இதுவொரு சாபம்போலும். “ க்ஷீரம் சர்க்கரயேவ ” (தசாவதார ஸ்தோத்ரே) என்று தேசிகனருளிச் செய்கிற கணக்கிலே பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் க்ஷீரமாயும் ஸ்தோத்ரபாஷ்யம் சர்க்கரையாயுமன்றோ தோன்றியுள்ளது. வெறும் பாலையும் வெறும் சர்க்கரையையுமுண்கிற மற்றவர்களைப் போலன்றிக்கே இரண்டையும் சேர்த்து அநுபவிக்கப் பிறந்த அடியேன் எய்தும் பேரின்பம் தொல்லைபின்பத்தினும் சீரியதன்றோ. உத்தமாச்ரமியாய் மஹாரஸிகராயெழுந்தருளியிருந்த (திவஂஜதரான) ஸ்ரீமத்பரமஹம்ஸ. இளங்காட்டு ஸ்வாமி சென்னைத் தொண்டமண்டலம் மஹோபந்யாஸசாலையில் எழுந்தருளியிருந்து ச்ரவணநந்த மநுபவிக்க மிக்க குதூஹலங்கொண்டு அந்த குதூஹலம் நிறைவேறப்பெற்று “ நெடுநாள் ஊறிக்கிடந்த ப்ரமமெல்லாம் இன்று தொலையப்பெற்றேன் ” என்று பல்லாயிரவர் முன்னிலையில் பேசியுகந்தார். அப்படியே ஸ்ரீஸ்வாமியையும் ஒரு நாளைக்காவது எம்

பெருமான் அந்த ஆஸ்தானத்திலே கொண்டு சேர்த்து க்ருதக்ருத்யனாகவேணுமென்று அஸக்ருத் பலர் பேசிக்கொள்வதுண்டு. இது நிற்க.

19. விவாதாஸ்பத ஸ்தோத்ரபாஷ்யஸ்தலத்தில் ஸ்வாத்மப்ரதாநே என்றோ, ஸ்வாத்ம போகப்ரதாநே என்றோ பாடமிருந்திருக்குமேயொழிய ஸாத்ம்யபோகப்ரதாநே என்றிருக்க ஸர்வாத்மநா தகுதியில்லையென்று ஸ்ரீஸ்வாமி ஆக்ரஹிப்பது வித்வத்ரஸிக கோஷ்டிகளில் விலை செல்லாதேயென்று வருந்துகிறேன். இங்கு ஸ்வாமி முக்கியமாக ஸாதிப்பது என்னவென்றால்; இங்கு ஸ்தோத்ரபாஷ்யத்தில் *பரித்ராணாயேத்யாதி ப்ரமாணமெடுத்திருக்கிறதே; ஸாத்ம்யபோகப்ரதாநத்திற்கும் பரித்ராணாயவுக்கும் என்ன ஸம்பந்தம்? என்று.—இதற்கு விஜ்ஞாபிக்கிறேன். நூற்றுக்கால் மண்டபத்தில் நடந்த வாக்யார்த்த சர்ச்சையில் இவ் விஷயமும் ப்ரஸ்துதமாயிற்று. த்ருப்திகரமாக உபபாதித்தேன். மத்யஸ்த வித்வான்கள் கேட்டு 'ஸூக்ஷ்ம நிபுண விமர்சமிது' என்று போரவுகந்தார்கள். அதை இங்கும் உபபாதிக்கிறேன். ஸாத்ம்ய போகப்ரதாநமாவது என்ன? என்று முன்னம் தெரிந்துகொள்ளவேண்டும். திருவாய்மொழியில் (4-5-5.) * ஆற்ற நல்லவகைகாட்டுமம்மான் * என்று ஆழ்வார் தாமே இதைக் கூறியுள்ளார். ஆற்ற—பொறுக்கப் பொறுக்க என்றபடி. எம்பெருமான் ஸம்ஸாரிசேதநர்க்கு அநுபவிப்பிக்கும் போகங்களை ஏககாலத்திலேயே அபரிமிதமாக அநுபவிக்கக் கொடுத்தருளினால் அது அநுபோக்தாக்களுக்குப் பயன்படாது; அங்ஙனன்றிக்கே சிறுகச்சிறுக அநுபவிப்பிக்குமதுதான் ஸாத்ம்ய போகப்ரதாநமென்பது. ஒரே ஸமயத்தில் கொட்டிவிடாமல் க்ரமேண ஸமயங்களில் கொடுக்கையாம்இது. கீழேயெடுத்துக்காட்டிய * ஆற்ற நல்லவகைகாட்டுமம்மானை * என்கிற பாசுரத்தின் கருத்தை தாத்பர்ய ரத்நாவளியில் ஸாரமாக ஸங்க்ரஹித்தருளாநின்ற தேசிகன் " ததுசித ஸமயாஸ்வாதநப்ரவீணே—ததுசிதஸமயாச்வாஸதாநப்ரவீணே " என்றார். அவ்விடத்திற்கு வியாக்கியானம் வருமாறு—"அவர்களை ஸமயமறிந்து ஸாத்மிக்க ஸாத்மிக்க அநுபவிப்பிக்குமவனாய்" என்று. ஆக, அநுபவங்களை க்ரமேண கொடுத்தருளுகையே ஸாத்ம்ய போகப்ரதாநமென்றதாயிற்று.

20. இனி, பரித்ராணாய ஸாதூநாம் என்ற கீதாச்லோகத்தின் பாஷ்யத்தையும் தாத்பர்ய சந்த்ரிகையையும் உற்று நோக்குவோம். "மத்ஸ்வரூபசேஷ்டிதாவலோகநாலாபாதிதாநேந தேஷாம் பரித்ராணாய" என்பது கீதாபாஷ்யஸூக்தி. பகவதவதாரம் ஸம்ஸாரிகளின் த்ராணத்திற்காக வன்று; ஸாதுக்களின் பரித்ராணத்திற்காக. பரி என்னுமுபஸர்க்கத்தோடு கூடின த்ராணத்தை ஸ்வாமி மத்ஸ்வரூபேத்யாதியாலே விவரித்தருளினார். அங்கு தாத்பர்ய சந்த்ரிகையில் ஸ்வாமி அருளிச்செய்திருப்பது அற்புதம்; "ஸ்வவிச்லேஷவ்யஸநிநாம் ஸஞ்ஜீவநாய ஸ்வஸ்ய க்ரமாத் ஸாத்ம்யப்ரகாசநம் உக்தம் * மத்ஸ்வரூபசேஷ்டிதாவலோகநாலாபாதிதாநேநேதி." என்பது தேசிக திவ்யஸூக்தி. இதில் க்ரமாத் என்பது தான் உயிரானசொல். எம்பெருமான் தனது ஸ்வரூபாவலோகநதாநம், சேஷ்டிதாவலோகநதாநம், ஆலாபதாநம் (அதாவது ஸம்பாஷித்தல்). ஆரூபதக்ராஹ்ய—ஸங்காடபரிஷ்வங்க ப்ரதாநாதிகள் ஆக இவற்றையெல்லாம் நினைத்தபோதே ஒரேக்ஷணத்தில் கொடுத்துவிடாமல் ஸாத்மிக்க ஸாத்மிக்க க்ரமேண கொடுத்தருள்வதுதான் ஸாது பரித்ராணமென்று பாஷ்யகாரர் திருவுள்ளம்பற்றினதாக தேசிகன் விவரித்திருப்பது அபலபிக்கமுடியாமலிருக்கிறது. இதே அர்த்தத்தைத்தான் பெரியவாச்சான்பிள்ளை ஸமர்த்தமென்றவிடத்திற்கு அருளிச்செய்திருப்பது. அதையேதான் ஸாத்ம்யபோகப்ரதாநஸமர்த்தமென்று ஸ்தோத்ரபாஷ்யத்திலருளிச்செய்திருப்பது.

21. "[illegible]நத்திற்கும் *பரித்ராணயவென்கிறப்ரமாணத்திற்கும் [illegible]?" என்கிறஸ்ரீஸ்வாமி இப்போது ஸங்கிக்ருஷ்ட ஸம்பந்தத்தை நன்கு அறிந்தருளியாயிருக்குமென்று நம்புகிறோம். தேசிகன் பெரியவாச்சான்பிள்ளை ஸூக்தியைப் பின்சென்று ஸாதித்தாரென்று ஒப்புக்கொண்டு விடுவதா? என்று பரமஸாத்விகரும் உத்தமாச்ரமியுமான மஹாஸ்வாமி எண்ணுவதும், "[illegible]." என்று எழுதுவதும் தகாது தகாது தகாது. தகுமென்னில் [illegible] இவ்விஷயமொன்றிலேயே வாதப்போர் நடக்கலாம். இதில் ஒரு முடிவு ஏற்பட வேண்டியது ஆவச்யகம். இதில் அடியேனுடையவாதம் அஸமஞ்ஜஸமென்று தேறிவிட்டால் இதுபோலவே எனதுஸகலவாதங்களும் அஸமஞ்ஜஸமேயென்று இசைந்து கைகூப்பிநிற்பேன். அடியேனுடைய ஒவ்வொரு நிரூபணமும் இங்ஙனே ஆழ்ந்து ப்ரமாண புஷ்கலமாகத்தானிருக்கும். ஸ்ரீமத்ஸ்வாமி திருவுள்ளத்திற்குத் தத்துவம் தெளிவதற்காக இவ்வளவு விவரித்து எழுதலாயிற்று. அரிய பெரிய ஆழ்பொருள்களும் இன்சுவைமிக்க பொருள்களும் நம்பிள்ளைவழியாகப் பெரியவாச்சான்பிள்ளையிடத்தும் வடக்குத்திருவீதிப்பிள்ளையிடத்தும் குடிகொண்டன. வடக்குத்திருவீதிப்பிள்ளை பட்டோலைகொண்டவை தேசிகன் காலத்தில் வெளிவர ப்ரஸக்தி நேராமையால் பெரியவாச்சான்பிள்ளை ஏறியருளப்பண்ணின திவ்யார்த்தங்களின் ஸௌரபமத்தனையும் தேசிக திவ்யஸூக்திகளிலே வீசப்பெற்றது. * [illegible] *

22. இவ்விஷயத்தில் விடை வெளிவரட்டும் என்று இவ்வளவோடு அடியேன் நிற்க வேண்டியவன். ஆயினும், ஸ்ரீபாஷ்ய சோதன விஷயத்திலும் சிறிது விமர்சித்து மருமம் விளக்கப்படுகின்றது.

23. ஸ்ரீபாஷ்யத்தில் ஜக்ஷிணயநாதிகரணத்தில் ([illegible]) என்று அச்சிடப்பட்டிருக்கிறது. இங்கு [illegible] என்கிற பதம் ஸம்ஸ்க்ருத பரிசயமுள்ளவர்களுக்கு அபாணினீயமென்று எளிதாகவே தோன்றக்கூடியது. அப்படியிருந்தும் பலவித்வான்களும் சோதித்த பதிப்புகளிலும் இப்படியே பாடம் காண்பதால் இதை ஸஹஸா திருத்திவிடத் துணிவு பிறக்கவில்லையடியேனுக்கு. இங்குத் திருத்தவேணுமானால் [illegible] என்று திருத்துவது உசிதமேயன்றி (ஸ்ரீஸ்வாமி திருத்தியிருக்கிறபடி) வேறுவிதமாகத் திருத்துவது சேராது. இதை ஸ்வாமியே அங்கீகரித்து அந்த விஷயத்தில் ஒன்றுமெழுதாமல் வேறு விஷயத்தில் சில எழுதியுள்ளார். அத்தனையும் அஸ்தானேயென்பதை விசதமாக நிரூபிக்கிறேன். ப்ரபித்ஸத: என்னுமிப்பதத்தைப்பற்றின விசாரம் ஆத்மநேபத பரஸ்மைபதங்களைப் பற்றினதேயாதலால், நம்முடைய பூர்வாசார்ய ஸ்ரீஸூக்திகளில் ஆத்மநேபதியானது பரஸ்மை பதியாகவும், பரஸ்மைபதியானது ஆத்மநேபதியாகவும் ப்ரயோகிக்கப்பட்டிருப்பது ஆங்காங்கு காணப்படுவதால் அவ்விடங்களில் ஒருவிதமான திருத்தமும் நம்மால் செய்யமுடியாமலிருப்பதுபோலவே இங்கும் நினைத்துக்கொள்ளலாமென்று சில பெரியார் கருதுவதுண்டு; அதை அடியேன் பரீக்ஷா க்ரந்தத்தில் எழுதிவைத்திருக்கிறேன். இதற்கு த்ருஷ்டாந்தமாக *வலதி புஜயோ:* என்கிற பகவத்யாநஸோபாந ப்ரயோகத்தைக் காட்டியிருக்கிறேன். இதனால் தேசிகனுடைய ப்ரயோகத்தை அடியேன் தூஷிப்பதாகத் திருவுள்ளம்பற்றிய ஸ்ரீஸ்வாமி கண்கள் சிவந்து பலவுமெழுதுகிறார். இங்கே அடியேன் வஸ்துதத்வத்தை விஜ்ஞாபிக்கிறேன். பாணினியின் வியாகரணத்திற்கு முரணான பிரயோகங்கள் தேசிக திவ்யக்ரந்தங்களில் மாத்திரமே அடியேனால் நிரூபிக்கப்பட்டிருந்தால் இதுவொரு ஆக்ரஹக்ருத்யமென்று ஸ்வாமி திருவுள்ளம்பற்றலாம்; சீற்றங்கொள்ளலாம். அடியேன் எழுதியிருப்பதை மறுபடியும் எடுத்துக்காட்டுகிறேன். *வலதி புஜயோ:* என்கிற தேசிகப்ரயோகத்தை யெடுத்துக்காட்டின

விடத்திலேயே அதே பங்க்தியிலேயே "ஸ்ரீவத்ஸாங்கமிஶ்ரபட்டார்யாதிஸூக்திஷ்வபி ஶப்தஶாஸ்த்ர விஸம்வாதஶங்காவஹா: ப்ரயோகா: ஸந்தி நாம கதிசித்; தத்ர கிம் கர்த்தும் ஶக்யம்." என்று எழுதியிருக்கிறேன். இதன் பொருளாவது, கூரத்தாழ்வான் பட்டர் முதலானாருடைய ஸ்ரீ ஸூக்திகளிலும் வியாகரணத்திற்கு இணங்காதவையென்று சங்கிக்கக்கூடிய சில பிரயோகங்கள் உள்ளன; அங்கு நாம் என்ன செய்யமுடியும்? என்பதாம். ஆகவே தேசிக ப்ரயோகத்தைப்பற்றி மாத்திரமே அடியேனெழுதியிருந்தால் தூஷண ருசியோடு எழுதினதாகக் கொண்டு சீறலாம். உண்மையில் அப்படியெழுதவில்லை. ஆழ்வான் முதலானாருடைய ஸ்ரீ ஸூக்திகள் கத்யரூபங்களல்ல; பத்யரூபங்கள். "அவதயாவாயாதிகம்" "நஹி மித்ரயாஸாக்ஷௌ ஜைத்ரம்" இத்யாதிப்ரயோகங்கள் பாணினீயவிருத்தங்களென்பதை அறிந்திருக்கிறோம். ஸ்ரீ பாஷ்யபங்க்திகளைத் திருத்திவிடுவதுபோல் இவ்விடங்களில் திருத்திவிட முடியுமாவென்று வித்வான்கள் விமர்சிக்கவேணும். ச்லோகமாகையால் சந்தோபங்கம் வாராதபடி திருத்துவது அருமைப்படும். வியாகரணத்தோடு இணங்காதவையென்று ஒப்புக்கொண்டும் திருத்த முடியாதவையென்று ஒப்புக்கொண்டும் கைகூப்பவேண்டிய இடங்கள் பல இருக்கின்றன என்று அடியேன் நிரூபணம் செய்திருப்பதில் என்ன பிசகு சொல்லமுடியும்.

24.* வலதி புஜயோ: *என்ற தேசிகப்ரயோகத்தையெடுத்து நாமெழுதின விஷயத்திற்கு ஸ்ரீஸ்வாமி மறுப்பெழுதுங்கால் "வாமநாலங்கார ஸூத்ரத்தை முன்னமே யெடுத்துக் காட்டிப் பரிஹாரம் செய்யப்பட்டிருப்பது இவர்க்குத் தெரியும்; தெரிந்தும் திருப்பித் திருப்பி அதையே யெழுதுகிறார்" என்று ஸாதித்திருக்கிறார். வாமநாலங்கார ஸூத்ரோபந்யாஸமென்பதை இதம்ப்ரதமமாக இன்றுதான் நாம் காண்கிறோம். முன்னமே கண்டிருந்தால் இதற்கு என்னபதில் எழுதக்கூடுமோ அதை இப்போது எழுதுகிறோம். சப்த தத்வ விஷயத்தில் பாணினி வரருசி பதஞ்ஜலிகளின் உக்திகளுக்கே ப்ராமாண்யம் ஸர்வஸம்ப்ரதிபந்நம். அவற்றுக்கு விருத்தமாகவுள்ள ப்ரயோகங்களைப்பற்றி விசாரம் நேர்ந்தால் சக்தியுள்ளவர்கள் ஆர்ஷ சாஸ்த்ரம் காட்டவேண்டும். அதைவிட்டு 'அவன் பிரயோகித்தான், இவன் பிரயோகித்தான்' என்று ஏதேதோ எடுத்துக்காட்டுவதில் லாபமொன்றுமில்லை. வாமநன் காட்டினாலென்ன? த்ரிவிக்ரமன் காட்டினாலென்ன? தேசிகனைவிட வாமனனுக்கு என்ன ஏற்றமுளது? அவனெடுத்துக்காட்டுகிற ப்ரயோகத்திற்குத்தான் தேசிகதிவ்ய ஸூக்தியைவிட என்ன ஏற்றமுளது? [illegible] என்று கூசாது கூறலாமே. சாஸ்த்ரவிருத்தமாயிருக்கிறதேயென்று சங்கித்தால் சாஸ்த்ரத்தைக்காட்டி சாஸ்த்ரவிரோத பரிஹாரம் பண்ணவேணுமேயொழிய வழிப்போக்கர்களின் வார்த்தைகளைக் காட்டுவதில் யாதுபயன்? *க்ருஞ்சாநுப்ரயுஜ்யதே லிடி* என்ற அநுசாஸனத்திற்கு விருத்தமாக *தம் பாதயாம் ப்ரதமமாஸ பபாத பச்சாத்* என்றும் *ப்ரப்ரம்சயாம் யோ நஹுஷம் சகார* என்றும் சிலகவிகள் ப்ரயோகம் பண்ணிவிட்டதனாலே வ்யாகரண துஷ்டத்வம் போய்விடாதன்றோ.

25. வ்யாகரண சாஸ்த்ரத்திலேயே அர்வாசீநர்களான பலர் வியாக்யானாதிகளிலே ஏதேதோ எழுதிவைக்கிறார்கள். அதையெல்லாம் ஸாகல்யேந நாம் ப்ரமாணமாக ஒப்புக்கொள்ள முடிகிறதோ? நிதர்சநமாக ஒன்று காட்டுகிறேன்; பரிபாஷேந்து சேகரத்தில் *ஸஞ்ஜ்ஞாபூர்வகவிதேரநித்யத்வம்* *ஆகமஶாஸ்த்ரமநித்யம்* *குணகார்யமநித்யம்* *அநுதாத்தேத்த்வலக்ஷணமாத்மநேபதமநித்யம்* இத்யாதிகளான சில பரிபாஷைகளையெடுத்துக்காட்டி "தந்ந; [illegible]." என்று மறுப்புரைத்திட்டார் நாகேசபட்டர். ஆனால் இவருடைய காலம் நம் ஆசாரியர்களின் காலத்திற்குப் பிற்பட்டது. இவர் இப்படி

மறுத்தெழுதிவிட்டாலும் நம் பூர்வாசாரியர்கள் அந்த பரிபாஷைகளை ப்ராமாணிகமாகவே கொண்டவர்களென்று தெரியவருகிறது. அந்த பரிபாஷைகளைக்கொண்டே உபபத்தி சொல்லக்கூடிய பிரயோகங்கள் நம் ஆசார்யர்களின் திவ்ய ஸூக்திகளில் காணப்படுகின்றனவே. ஆதலால் வையாகரண கோஷ்டியில் மிக்க மேன்மை பெற்ற நாகேச பட்டரும் நமக்குச் சில விஷயங்களில் தள்ளப்படவேண்டியவராகிறார். ப்ராஸங்கிகமான விது நிற்க.

26. நமக்கு உபபத்தி தெரியவில்லையென்கிற காரணங்கொண்டே மஹாசார்ய ப்ரயோகங்களை நாம் திருத்திவிடுவது உசிதமன்று. பாதுகாஸஹஸ்ரத்தில் * முகபாஹூருபாதேப்ய: * என்கிற பஹுவசந ப்ரயோகமானது ஏகவத்பாவவிதாயக சாஸ்த்ரத்திற்கு முரணாயிருக்கிறதென்பது ஸ்ரீஸ்வாமிக்கும் தெரிந்ததுதானே. இங்கே ஸ்வாமி எவ்விதமாகத் திருத்துகிறாரென்பது தெரியவேணுமே. ஏதாவது உபபத்திமார்க்கமிருக்கும்' என்று நினைப்பது எங்குமொக்கும். ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்தங்களானவை அல்பஜ்ஞர்களான அஸ்மதாதிகளால் மாத்திரமன்றிக்கே பல சதுச்சாஸ்த்ரவித்வத் பரிப்ருடர்களாலும் பாடப்ரவசநாதிகளில் கொள்ளப்பட்டிருக்கின்றன. அன்னவர்கள் திருத்தியிருக்கும் ஸ்ரீ கோசங்களை ஸம்பாதித்தோ, அன்னவர்களிடம் நேரில் உபதேசங் கேட்டோ திருத்தங்களைத் தெரிவிக்கலாமேயல்லது நாம் ஸ்வபுத்தியைக்கொண்டு ஸ்வதந்திரமாகத் திருத்தங்களைச் செய்துவிடக்கூடாதென்பதே அடியேனுடைய பரீக்ஷா க்ரந்தத்தின் ஸாராம்சம். இதை அந்தக்ரந்தத்தில் இருபதாவது பாராவில் ஸ்பஷ்டமாகவே எழுதியிருக்கிறேன்; அங்குள்ள பங்க்திகளின் பொருள் இது காண்மின்; "இந்த ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமி நெடுநாள் ஸதாசார்ய ஸேவை பண்ணினவர்; ஸ்வாசார்ய ஸன்னிதியில் ஸ்ரீ பாஷ்யாதி க்ரந்தங்களை ஸேவிக்கும்போது திருத்தவேண்டிய தப்புப்பாடங்களை அந்த ஆசார்யர்தாமே திருத்திக்கொடுக்கப் பெற்றிருப்பர். தப்புப்பாடங்களையே ப்ரவசநம் செய்பவல்ல ஆசார்யரை இவர் அடிபணிந்திருக்கமாட்டாரே. ஆக அஸ்மதாசார்யர் திருத்திக்கொடுத்தருளின பாடங்கள் இவையிவை என்று ஸ்வாமி வெளியிட்டிருந்தால் அழகாயிருக்கும். * குரும் ப்ரகாசயேத் தீமாந் * என்ற சாஸ்த்ரத்துக்கும் அது ஒக்கும். ஸ்வாசார்யர் ப்ரவசனம் செய்தபோதும் பாடங்களைத் திருத்தாமல் தப்புப்பாடங்களையே கற்பித்தாரென்றும், பிறகு நானாகவே ஆராய்ச்சி செய்து பாடத்திருத்தங்களைச்செய்கிறேனென்றும் ஸ்வாமி ஸாதிப்பாரானால் இதன்மேல் பலபல கேள்விகள் தோன்றியே தீரும், தம்முடைய புத்திபரிச்ரமத்தாலேயே பாடத்திருத்தங்களைத் தாமே உந்நயிப்பதாக ஸ்வாமி தெரிவிக்குமது யுக்தமன்று" என்று.

27. ஸ்வாமி தாம் திருத்திய பாடங்களில் சிலவற்றுக்கு ஓலை ஸ்ரீகோசத்தை ஸம்வாதப்ரமாணமாகக் காட்டியருளுகிறார். இப்போது வெளியிட்ட தத்வப்ரகாசத்திலும் ஆறாவது பக்கத்தில் ஒரு தாள கோசத்தை ப்ரஸ்தாவித்து அது தம்முடைய அந்தரங்க சிஷ்யரிடத்தில் ஸுரக்ஷிதமாயிருப்பதாகக் குறிப்பிடுகிறார். அதை ப்ராமாணிககோச மென்று தாம் திருவுள்ளம் பற்றுகிறார். அப்படிப்பட்ட தாளகோசத்திலும் ஸ்வாமி திருத்துகிற மற்றைப்பிழைகள் அப்படியே யிருக்கின்றனவா? திருத்தம் பெற்றிருக்கின்றனவா? என்று பார்க்கட்டும். இங்ஙனே பல தாள கோசங்களைப் பரிசீலிக்கும் சிரமத்தை ஏற்றுக்கொண்டு, தமக்கு சங்கையுள்ள விடங்களில் தாம்மனஸ்ஸமாதான மடையும்படியான பாடங்கள் அவற்றில் காணப்பட்டால் ஆனந்தமாக வெடுத்து வெளியிடட்டும். இல்லையா, 'இன்ன ஆசார்யரிடத்திலே இந்த சுத்த பாடத்தைக்கேட்டேன்' என்று சில பெரியாருடைய திருநாமத்தைக் குறிப்பிட்டு எழுதட்டும். அதுதான் உலகுக்குப் பயன்படும்.

28. இந்த ப்ரகரணத்தில் ஸ்ரீஸ்வாமி அடியேனைப்பற்றி யெழுதுகிருர்—"கிம்பஹு நா? ஸமஸ்தம் ஸாதந்தரம்" என்று. 'எல்லாரும் ப்ரமித்து விட்டார்கள்; எல்லாருமே தப்பான பாடத்தைக் கொண்டுவிட்டார்கள்; திருத்தம் காண்பவன் நானொருவனே' என்று அபிமானித்திருக்கிற ஸ்ரீமத்வசநம் ஸமஸ்தம் ஸாதந்தரம். விஷயத்தை விட்டு இப்படிப்பட்ட வார்த்தைகள் ஏதுக்கு?

29. ஸ்ம்ருத்யதிகரணபாஷ்யாரம்பத்தில் * அபரிமிதோதாரகுணஸாகரம் பரம் ப்ரஹ்ம* என்று (ப்ரதமாவிபக்தியில்) ப்ரயோகமுள்ளது. இங்கே 'அபரிமிதமான உதாரகுண ஸாகரத்தையுடையவன் எம்பெருமான்' என்றே விவக்ஷித்தாகவேண்டும். அபரிமிதமான உதாரகுணங்களுக்குக் கடல் போன்றவன் என்று விவக்ஷிதமானல் * அபரிமிதோதாரகுண ஸாகரோ ப்ரஹ்ம* என்று பும்லிங்கமாகத்தானிருக்கவேண்டும்................இத்யாதிகளை அடியேன் பரீக்ஷாக்ரந்தத்தில் (பாரா 4ல்) எழுதியிருக்கிறேன். மேலே இருபத்தோராவது பாராவில் "அபரிமிதோதார குணஸாகரமென்கிற ஸ்ரீ ஸூக்தியைப்பற்றி அடியேன் கீழே காட்டிய ஆராய்ச்சியை ஸ்ரீஸ்வாமி விசேஷித்து கவனிக்கவேணும்" என்றுமெழுதியிருக்கிறேன். இங்கே என்ன மருமமென்பதை ஸ்ரீஸ்வாமி திருவுள்ளம் பற்றுமல் ஏதோ எழுதியிருக்கிருர். அந்த மருமத்தை இங்கு விவரிக்கவேண்டியது அவசியமாகிறது. நாம் பாடசோதநபரீக்ஷை வெளியிட்டதற்குப்பிறகு சிலமாதங்களுக்குப்பின் நமது வைதிக மநோஹரா பத்ரிகையில் குணஸாகர: என்று மகுடமிட்டு மிகவிரிவாக எழுதியிருக்கிருேம். (அது ஸம்ஸ்க்ருத பாஷையில்.) ஸமீபகாலத்தில் நந்தன வரு சித்திரைமீ ஸ்ரீராமாநுஜ பத்ரிகையில் (ஸ. 39) தமிழிலேயே மிக விரிவாக வெளியிட்டிருக்கிருேம். இவற்றின் ஸாரமாவது— பகவான் குணங்களுக்குக் கடலாயிருப்பவர் என்று ஸகல கவிகளும் பேசுகிற வழியைவிட்டு 'பகவான் குணக்கடலையுடையவர்' என்று பஹுவ்ரீஹியினுல் உபபந்நமாகக் கூடிய ப்ரயோகத்தை ஸ்ரீ பாஷ்யகாரர் ஏதுக்குச் செய்தாரென்னில்; நம்மாழ்வார் "மிகுந் திருமால் சீர்க்கடலையுள்பொதிந்த சிந்தனையேன்" என்கிறபாசுரத்தில் பகவத்குணங்களைக் கடலாக ரூபித்து அருளிச் செய்திருக்கையாலே, ஸ்வாமி பாஷ்யகாரர் ஆழ்வார்வழியைத் தழுவிப்பேசுகிறவர் என்று நம் ஆசார்ய கோஷ்டியிலுள்ள ப்ரஸித்திக்கு இணங்கவே [ஆழ்வார் ஸ்ரீஸூக்தியை அநுஸரித்தே குணங்களை ஸாகரமாக அருளிச்செய்தார். இதை ஸ்ரீ ஸ்வாமியோ மற்று யாரேனுமோ வெளியிடுகிருர்களா பார்ப்போம் என்கிற பரீக்ஷைக்காகவே அடியேன் வேறுவிதமாக எழுதினேன். அதூ ரக்ஷிதஸ்ய ஸ்வயம் பரீக்ஷணீயம் ஸ்யாத் என்னும்படியாயிற்று. உண்மையான இந்த மருமத்தை யெடுத்துக்காட்டாமல் எதையோ எழுதுவதில் பயனென்? "தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல்தாய் சடகோபன், மொய்ம்பால்வளர்த்த இதத்தாய் இராமாநுசன்" என்று நாம் அநுஸந்தித்து வருவதற்குப் பொருத்தம் காட்டவேண்டிய பலவற்றுள் இதுவுமொன்று. இதை ஸ்வாமிபோல்வார் காட்டுவதற்கு என்ன ப்ரஸக்தி? காட்டினுல் ரஸிப்பதுங்கூட ஸந்திக்தமாயிருக்கும். இது மிக அருமையான விஷயமாதலால் ஸாமான்யமாகக் காட்டிவிடலாகாதென்றும் சிறிது உத்வேகத்தையுண்டாக்கியே காட்டவேண்டுமென்றும் கருதியே அடியேன் வேறுவழியில் நுழைந்திருந்தது. இற்க.

30. ஸ்ரீஸ்வாமி அந்யதீய க்ரந்தங்களில் சோதனம் செய்வது இருக்கட்டும்; ஸ்வ க்ரந்தத்தில்தாமே சோதனம் செய்துகொள்ளுகிருர்; அதைப்பற்றிச் சிறிது விஜ்ஞாபிக்கிறேன். ப்ரக்ருத தத்வப்ராகாச க்ரந்தத்தில் (பக்கம் 7-ல்) ஸஹவஹீயமென்ருெரு சப்தப்ரயோ

கம் தாமேசெய்து அச்சானபிறகு அதை ஸாமவத என்று தமது திருக்கையால் திருத்தி வெளியிட்டிருக்கிறார். இந்தத்திருத்தம் ஸக்ருத் அல்ல; அஸக்ருத். ஸாமவதீயமென்று ப்ர யோகித்தபோது அது சுத்தமான சொல் என்று திருவுள்ளமிருந்தது, அச்சான பிறகு அது அசுத்தம் என்று தோன்றிவிட்டது என்று நிர்ணயிக்கலாகிறது. ஸாமவத் சப்தத்தின்மேல் ச்ப்ரத்யயம் ஏறாதென்று திருவுள்ளம்போலும். இந்த ப்ரயோகம் தேசிக திவ்யஸூக்தி களிலுமுள்ளதே. எங்கேயிருக்கிறதென்பதை இப்போது விஜ்ஞாபிக்கவில்லை; ஸமயாந்தரே விஜ்ஞாபிக்கிறேன். பகவச்சப்தத்தின்மீது ச்ப்ரத்யயம் ஏறுவது அசாஸ்த்ரீயமன்று. (வ்ரு. ஸூ.) * வா நாமதேயஸ்ய வ்ருத்தஸம்ஜ்ஞாவக்தவ்யா. * ஆனால் "கௌஞ்ஜாயநாதிஷு நாமத்ருஷ்யதே" என்ற வியாக்கியானத்தைக் கடாக்ஷித்திருந்தால் * ம ஹாதிக்ஷாகலாய: என்று கொள்ளத்தடையில்லையே. ஸ்வாபிப்ராயாநுகூலமாக திருத்துவதானால் (தீ) என்பதை (தி) என்று திருத்தலாம். [ஸாமவதீயமன்று, ஸாமவதியம் என்று திருத்தலாம்.] சொல் வடிவத்தையே அடியோடுமாற்றித் திருத்தியிருப்பது நலமோ? 'என் சொல்லை நான் எப்படி வேணுமானாலும் திருத்திக்கொள்ளுகிறேன், உனக்கென்னவந்தது?' என்று கேட்டருளினால் அடியேனிடம் உத்தரமில்லைதான்.

31. சப்தம் ஸ்வகீயமானாலென்ன? பரகீயமானாலென்ன? உபபத்தியையோ அநுப பத்தியையோ க்ரஹிக்கிற மேதையின் விலாஸத்தை எது கொண்டும் நிர்ணயிக்கலாமன்றோ. இப்படியெல்லாம் ஸௌகர்யங்களிருக்கின்றனவென்று அடியேன் அநாயாஸமாக எடுத்துக் காட்டுவதற்காகவே ஸ்வாமி இந்த (ஸாமவதீய) பதப்ரயோகமும் அதன் திருத்தமும் செய் தருளினாரென்று விஜ்ஞாபித்துக்கொண்டபடி.

32. ஸ்வாமி ஸம்ஸ்க்ருதத்தில் எழுதியிருப்பதற்கு நாமும் ஸம்ஸ்க்ருதத்திலேயே எழுதுவதுதான் உசிதம். வைதிகமநோஹராமூலமாய் அப்படியேயாகும். ஸம்ஸ்க்ருத பரிச்ரமாதிசயமில்லாத சில பரமைகாந்திகளுக்கும் இவ்விஷயங்கள் தெரிந்திருப்பது நல மென்று தோன்றி இது எழுதினபடி. தத்வப்ரகாச.பராமர்சத்தை இவ்வளவோடு நிறுத்திக் கொண்டு இனி தத்வதீபிகா விமர்சத்தில் இழிகிறோம். ... .... .... *

# தத்த்வதீபிகா விமர்சம்.

1. நான்கு வருஷங்களுக்கு முன்பு அடியேன் வெளியிட்டிருந்த அத்புதசக்தியென்னும் க்ரந்தத்தை யுத்தேசித்து ஸ்ரீஸ்வாமி தத்த்வதீபிகையெழுதியிருக்கிறார். தொடங்கும்போதே "அத்புதசக்தியென்னும் க்ரந்தத்தில் காணப்படும் சில விஷயங்களை" என்று தொடங்கு வதால் இது ஸுஸ்பஷ்டம்.

2. ஆனால் இந்த க்ரந்தம் ஸ்வாமி திருநாமத்தால் வெளிவந்திருந்தாலும் ஸ்வாமியே நேராக எழுதியதென்று தோன்றவில்லை. ஸ்வாமி ஸம்ஸ்க்ருதத்தில் எழுத, அதை வேறொரு வர் தமிழில் மொழிபெயர்த்திருக்கலாம் என்று தோன்றுகிறது. எதனாலென்னில்; இதில் (பக்கம் 9ல்) "இவ்விடத்தில் இது அறியத்தக்கது" என்று ஒரு பாரா ஆரம்பமாகிறது. தமிழ் நூல்களில் இப்படியெழுதுவதை எங்கும் கண்டதில்லை. ஸம்ஸ்க்ருத க்ரந்தங்களில் தான் * அத்ரேதம் போத்யம் * என்று தொடங்குவதுண்டு. மிகச்சிறுவிஷயமாதலால் இது கிடக்க. இந்த க்ரந்தமெழுதும் ச்ரமத்தை ஸ்வாமி வஹித்துக்கொண்டது அஸ்தானே. ஏனென்னில்; பரமபுருஷனுடைய ப்ரதிவஸ்து பூர்ணத்வத்தைப்பற்றி முதலில் அடியேன்

திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில் [திருச்சந்த விருத்தவுரையில் பா. 5.] எழுதியிருந்தேன். அதன்மேல் ஸ்ரீஸ்வாமி பூர்ணத்வவிசாரமென்றொரு சிறுக்ரந்தமியற்றியருளினர். அதன்மேல் (1937ஹூ) அடியேன் இயற்றி வெளியிட்டது ப்ரஹ்மவ்யாப்தி பரிஷ்க்ரியா. இது வெளிவந்து 15 வருஷங்களாயின. இந்த க்ரந்தம் ஸ்வாமியைக் குறித்தே 122 ச்லோகங்களாகவும் தத்விவரணகத்யங்களாகவும் தோன்றியது. இதற்குத்தான் ஸ்வாமி பதிலெழுத வேண்டியவர். ஸுமுக்த தாயிரவா ஸ நிரவமூகதாயிரவா நெடுநாள் வாளா இருந்துவிட்டு, இப்போதும் அதற்கு பதில் எழுதாமல், வேறொருவர் எழுதியிருந்த ஸர்வசக்தியென்னும் ஈவடிக்கு மறுப்பாக நாம் எழுதியிருந்த அத்புத சக்திநூலைப்பற்றி விசாரிக்கப்புகுந்திருக்கிறார். இது ஸ்வாமிக்கு அநவஸரமான பரிச்ரமம். அத்புதசக்திக்கு பதிலெழுதக் கடமைப்பட்டவர் கைகூப்பி நிற்கும்போது இந்தத் தலைவேதனைகளில் ஸ்வாமி ஏன் ப்ரவர்த்திக்கவேண்டும்? ப்ரவர்த்தித்தாய்விட்டதே; இனி என்ன செய்வது. இதற்கு அடியேன் பதிலெழுதவேண்டிய அவச்யமில்லையென்று ஒரேவார்த்தை சொல்லி நிற்கலாம். ஆனாலும் ஸ்வாமி திருவுள்ளத்தில் தெளிவு பிறப்பிக்கவேண்டி மிகவும் சுருக்கமாக எழுதுகிறேன். உப்புப்புளிப்பொன்றுமின்றி வளவளவென்று எழுதிக்கொண்டுபோகும் விஷயங்களுக்கெல்லாம் நாம் விடை கூறவேண்டிய அவச்யமில்லை. நமது அத்புத சக்தியில் எட்டு அத்யாயங்களிலே நாம் விரிவாக எழுதியிருப்பவற்றில் ஒன்றுக்குக்கூட பதில் சொல்லவில்லை, சொல்லவும் முடியாது. ஆநுபூர்வியாக மறுப்பெழுதத் தொடங்கினலன்றோ மருமம் வெளியாகு

3. பரமபுருஷனுடைய ப்ரதிவஸ்து பூர்ணத்வவிஷயத்தில் ந்யாய ஸித்தாஞ்ஜநத்து நிர்ணயம் நிர்விவாதமானதென்றும் ரஹஸ்யத்ரயஸார நிர்ணயம் ஸவிவாதமானதென்றும் நாம் நிரூபித்திருக்கிற விஷயம் சிலாலிகிதமேயொழிய வேறன்று. உபநிஷத்பாஷ்யகாரரான ரங்கராமாநுஜஸ்வாமியிடத்தில் அடியேனுக்கு மஹத்தான கௌரவமுண்டு. அவர் நவீனர்களின் சண்டைகளில் தலையிட்டவரேயல்லர். ப்ரக்ருத விஷயத்தில் அவர் எவ்வளவு ஸ்பஷ்டமாக எழுதியிருக்கிறரென்பதை நாம் பலகால் எடுத்துக்காட்டியிருக்கிறோம். அதுதான் மத்யஸ்தபாஷிதம். அவர் *பரந்த தண் பரவையுள்* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தின் ஸம்ஸ்க்ருதடீகையில் "ஏகைகஸ்மிந் ஜலபரமாணௌ வ்யக்திஷு ஜாதிவத் பர்யாப்தவ்ருத்தி:" என்று நிஸ்ஸந்தேஹமாக எழுதியிருக்கிறார், இதுதான் ந்யாயஸித்தாஞ்ஜந நிர்ணயஸாரம்.

4. ஸித்தாஞ்ஜநத்தில் ஈச்வரபரிச்சேதத்தில் "ஸ்வேதர யாவத்ஸர்வ த்ரவ்யவ்ருத்தி..." என்று முடித்ததில் குறைகிடந்த அம்சங்களை மேலே அத்ரவ்ய பரிச்சேதத்தில் *க்ருத்ஸ்ந ப்ரஸக்திரித்யாதி ப்ரஹ்மஸூத்ரத்தை யெடுத்துக்காட்டுவதோடும் நில்லாமல் "யதா ஜாதிவாதிநோ ஜாதிரேவ ஸர்வத்ர ... வ்யக்திஷு ஸகலேஷ்வபி ... " இத்யாதி வேதாந்ததீப ஸ்ரீஸூக்தியையும் எடுத்துக்காட்டித் தெளிவு பிறப்பித்திருக்கிறார். இந்த களேபரங்களெல்லாம் நமக்கேன்? ரங்கராமாநுஜஸ்வாமி தேனைத் திரட்டிக்கொடுப்பவர்போன்று "ஏகைகஸ்மிந் ஜலபரமாணௌ வ்யக்திஷு ஜாதிவத் பர்யாப்தவ்ருத்தி:" என்றெழுதியிருக்கிறரே. இது ஒன்று போராதா? வ்யக்திகளில் ஜாதியின் இருப்பு எப்படிப்பட்டதென்பதை அநேகதார்கிகர்கள் விவரித்துள்ளார்கள். ஜயந்தபட்டன் என்ற தலைப்பின்கீழ் பிறரே எழுதியுள்ளார்கள். அவர் என்ன சொல்லுகிறரென்றல், "ஜாதியைப் பரிஸமாப்ய வர்த்தியென்கிறீரே, ஒரு வ்யக்தியிலேயே முடிந்து நிற்பதையன்றே பரிஸமாப்ய வர்த்தியென்பது; மற்றும் பலபல வ்யக்திகளிலுமிருக்கிறவிதனை ஒரு வ்யக்தியில் பரிஸமாப்ய வர்த்தியாக எப்படிச்சொல்லுகிறீர்?" என்று கேட்பவர்களுக்கு இந்த ஜயந்தபட்டாசார் என்ன மறுமொழி கூறுகிறார் தெரி

யுமோ? " என்னைக்கேட்டால் நானென்ன சொல்லுவது? பரிஸமாப்யவர்த்தியென்று சொல்லித்தீரவேண்டியதாயிருக்கிறது; அது மற்ற வ்யக்திகளிலும் காணப்படுகிறதேயென்கிறீரோ, ஆமாம், காணப்படுகிறது. அதை இல்லைசெய்ய யாரால் முடியும்? அதையும் இசையவேண்டியதே; இதையும் இசைய வேண்டியதே—என்று. இதையெல்லாம் நாம் பலகால் எடுத்துக்காட்டியும் பயனில்லை. இவர்களுடைய கண் ரஹஸ்யத்ரயஸாரமொன்றிலேயே பாயவேண்டியது விதியாயிருப்பதால் மற்றவற்றிலே அந்தர்களாகிறார்கள். இப்படிசூழ் ரங்கராமாநுஜஸ்வாமிக்கு இல்லை என்பதுதான் விசேஷம்.

5. அகடிதகடநாசக்தி யென்பது பகவானுக்குக் கிடையவேகிடையாதென்றும் அது அர்த்தமற்ற வார்த்தையென்றும் ஸ்ரீமத் கோழியாலம் ஸ்வாமியின் உறுதி. இந்த ப்ரமத்தை (அல்லது) அபசாரத்தைத் தவிர்க்கவே நாம் * நல்குரவும் செல்வும் * என்கிற திருவாய்மொழிக்கு தேசிகனிட்டருளின ச்லோகத்தை யெடுத்துக்காட்டினோம். இங்கே ஸ்வாமி என்ன எழுதுகிறாரென்னில்; (பக்கம் 5ல்) "இத்ருசக ப்ரதாநப்ரதிபாத்ய விஷயத்தில் அபிப்ராயபேதமுண்டேயாகிலும்" என்று தொடங்கி ஏதோ காடுபாய்ந்தெழுதுகிறார். அபிப்ராயபேதமிருப்பதாக ஒப்புக்கொள்ளுகிறார். யாருக்கும் யாருக்கும் அபிப்ராயபேதம்? எவ்விதமான அபிப்ராயபேதம்? இதில் தேசிகாபிப்ராயம் எதற்கிணங்கியது? என்னுமிக் கேள்விகளுக்கு நேர் நின்று பதில் அருளிச்செய்யவேணுமே; அஸ்து. எம்பெருமானை தேசிகன் அகடிதகடகன் என்று ஒப்புக்கொள்ளுகிறார்; * புரிஸபஹ்ராண ஸரோ* என்ற அச்யுத சதகச்லோகத்தில் எம்பெருமானை அத்புதசக்தியென்றும் ஒப்புக்கொள்ளுகிறார். இப்படிப்பட்ட சக்திவிசேஷத்திற்கு எங்கே என்ன உபயோகம்? என்று கேட்டால், இக்கேள்விக்கு எல்லாருந்தான் பதில் சொல்லவெணுமென்கிறார்.

6. சிங்கத்தையும் யானையையும் புலியையும் பசுவையும் ஒரு துறையிலே நீரூட்டுகிற பாமரர்கள் பலருளர். இந்த விநோதத்தை அற்புதக் காட்சிகளில் ஆங்காங்குக் காட்டுகிறார்கள். அவர்களைப்போலே எம்பெருமானுமொருவன் என்று ஸ்வாமி திருவுள்ளமாக முடிந்திருக்கிறது. இது சிறந்த வேதாந்த ஞானம்.

7. நாம் அத்புத சக்தியில் (பக்கம் 11-ல்) "வ்யாப்தனுக்கு ப்ரதிவஸ்து பூர்ணத்வமாவது வஸ்து தோறும் ஸ்வரூப ஸமாப்திதான்; அதாவது ஒரொரு உபாத்யவச்சிந்ந ப்ரதேசமே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல சக்தியுடைத்தாயிருக்கை—என்று எழுதிவைத்தால் எவ்வளவு அழகாயிருந்திருக்கும். ந்யாய ஸித்தாஞ்ஜந ஸ்ரீஸூக்தியோடு விரோதம் விளையாமலிருப்பது முதல் லாபமாகுமே." என்று எழுதியிருக்கிறோம். இது *ப்ரலயேபி ந லீயதே* என்னும்படியான வார்த்தை. ரஹஸ்யத்ரய ஸாரத்தில் உள்ள ஸ்ரீஸூக்தியை சிக்ஷிக்க இவரார் கொல்? என்று நினைத்துக் கோபதாபங்கள் மேலிடுவதில் ஆச்சரியமில்லை. ஆனாலும் "தர்க்க பாண்டித்யத்தாலே நினைத்ததெல்லாம் ஸாதிக்கலாயிருக்கச் செய்தேயிறே" என்று ஒரு விலக்ஷண ஸாமர்த்தியத்தை ப்ரஸ்தாவித்தது அந்த ஸாரக்ரந்தத்திலேயாதலால் அது தன்னிலே தாத்ருச ஸாமர்த்ய ஸ்தாபகமான ஸ்ரீஸூக்திகள் தைவக்ருதங்களாய் வந்து புகுந்தனவென்றால் இதில் விஸ்மயமொன்றுமில்லை. இதை இல்லை செய்ய பூமண்டலத்திலுள்ள பண்டித மண்டலிகளெல்லாம் ஒன்று கூடினாலுமாகாது. * அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாமென்று தனியனிடப்பெற்றிருக்கிற அந்த ஸாரசாஸ்த்ரத்திலே உள்ள மருமம் அவிஜாநதாம் ஜாநதாம் விஜ்ஞாதமாயும், விஜாநதாம் அவிஜ்ஞாதமாயுமிருக்கிறதென்றால் இதில் சீற்றமேதுக்கு? தனியன் ஸத்யமானதென்றுதானே அடியேன் ஸ்தாபித்து நிற்கிறது. இனி விஷயத்தில் செல்வோம்.

8. இங்கு ஸ்ரீஸ்வாமியானவர் (பக்கம் 12-ல்) "அந்த அழகைக் கொஞ்சம் விசாரிப்போம். அப்படி எழுதிவைத்தால்.........இவருக்கு என்னலாம்? என்பதை மத்யஸ்தர்கள் பராமர்சிக்கவேண்டும்" என்று அருளிச் செய்கிறார். எனக்குள்ள லாபத்தை அத்புதசக்தியிலேயே நிரூபித்திருக்கிறோம். ந்யாயஸித்தாஞ்ஜநக்ரந்தத்தோடு அவிருத்தமாகிறது என்பது முதல் லாபம். ஸ்ரீ பாஷ்யகாரர் பட்டர் நம்பிள்ளை முதலான மஹாசார்யர்களின் ஸுஸ்பஷ்ட ஸ்ரீ ஸூக்திகளோடு விரோதம் கொள்ளாமலிருப்பது இரண்டாவது லாபம். எம்பெருமாளிடத்தில் அபசாரம் தேறாமலிருப்பது பரமலாபம். இங்கு ஸ்வாமியினுடைய ஸம்ரம்பங்கள் ஸர்வதா அஸ்தானே. வஸ்துதோறும் ஸ்வரூபஸமாப்தியென்பதைத் தம்முடைய திருவாக்காலோ திருக்கரத்தாலோ கண்டிக்காமல், பரமவைதிக மஹாசார்ய ஸம்ப்ரதிபந்நமான அதனை அப்படியே இசைந்திட்டு, அதற்கு தாத்பர்யமாக எதையாவது எழுதிவைத்தால் நன்றாயிருந்திருக்கும்—என்று நாம் தெரிவித்திருப்பது மிகவும் யுக்தமானதே. ஸ்ரீஸ்வாமி யெழுதுவதில்—"பூர்ணத்வமானது முடிவில் இப்படிப்பட்டதானால் ப்ரஹ்மஸ்வரூபத்திற்கு ஒவ்வொரு வஸ்துவிலும் நிச்சேஷமாக முடிவு சொல்லப்படவில்லையாகையாலே" என்றுள்ள வாக்யங்கள் ஸர்வாத்மநா விரஸங்கள். ஒரோரு பாத்யவச்சிந்நப்ரதேசமே ஸர்வத்தையும் நிர்வஹிக்கவல்ல சக்தியை யுடைத்தாயிருக்கை யென்னுமதும் வஸ்துதோறும் ஸ்வரூபம் ஸமாப்தமென்னுமதும் பரஸ்பரவிருத்தங்களல்ல. இதைப்பற்றி மறுபடியும் ஸ்வாமி திருவெழுத்து சாத்தநேர்ந்தால் அப்பொழுது விஸ்தரத்தில் வெறுப்பின்றிக்கே வீதியுமின்றிக்கே விரிவாக எழுதுவோம். இப்போது அசிந்திதமாக நமக்கு உத்தரதேச யாத்ரை ப்ராப்தமானபடியால் ஸ்ரீஸ்வாமி ஸந்நிதியில் விடைபெற்றுக்கொண்டே புறப்படுகின்றவடியேன் இப்போது இவ்வளவோடு இதை நிறுத்துகிறேன்.

9. வேதார்த்த ஸங்க்ரஹதாத்பர்ய தீபிகையிலுள்ளதாகப் பலகால் அடியேனெடுத்துக்காட்டியிருக்கின்ற திவ்யஸூக்தியொன்றே போரும் இவர்களுடைய மருளை மாய்ப்பதற்கு. அந்த ஸ்ரீஸூக்தி தமக்கே அநுகூலமென்றும் ஸித்தாந்திகளுக்கு ப்ரதிகூலமென்றும் ஸ்வாமி எழுதியுள்ளார். வாசாப்ரதிஜ்ஞை எவ்விதமாகவும் செய்துவிடலாம். அதில் ப்ரயாஸமொன்றுமில்லை. விஷயங்களை உபபாதனம் பண்ணி ப்ராமாணிகர்களை யூகப்பிக்க வேணும். உபநிஷத்பாஷ்யகாரரான ரங்கராமாநுஜஸ்வாமி "ஏகைகஸ்மிந் ஜலபரமாணௌ வ்யக்திஷு ஜாதிவத் பர்யாப்தவ்ருத்தி:" என்று பணித்த ஸ்ரீஸூக்தியில் ஸந்தேஹகந்தத்திற்காவது விவாத லேசத்திற்காவது இடமுண்டோ? இந்த ஸ்ரீஸூக்தியைப்பற்றி ஒரு ப்ராமாணிக வித்வான் பணித்ததாவது, "ரங்கராமாநுஜஸ்வாமிக்கு ரஹஸ்ய ப்ரஸ்தானத்தில் ப்ரவேசம் குறைவு; அதனால் அவருடைய ஸ்ரீஸூக்திகள் பலவும் ரஹஸ்யமார்க்கத்திற்கு முரண்பட்டிருக்கின்றன. அவர் ப்ராமாணிகரேயாகிலும் ரஹஸ்யக்ரந்தங்களுக்கும் சேர அருளிச் செய்யாமை அவரிடத்தில் பெரிய குறையே." என்று. உண்மையில் இது ப்ராமாணிகமான உத்தரமே.

10. ஸ்ரீமத் கோழியாலம் மஹாஸ்வாமி ஸன்னிதியில் ஸப்ரணமம் ஸவிநயம் ஒன்று விஜ்ஞாபிக்கிறேன். ஸ்வாமிக்கும் அடியேனுக்கும் ஸௌஹார்தம் அந்தரங்கஸாக்ஷிகமாய் ஒருபுறமிருக்க, க்ரந்தமூலமான வாதப்ரதிவாதங்களும் விசேஷமாக நடந்திருப்பதுண்டு. ஸ்வாமி தாமாகவும் தமது சிஷ்யர்களைக் கொண்டும் எழுதி வெளியிட்ட க்ரந்தங்களெல்லாம் ஒன்று தவறாமல் பூர்வபக்ஷ க்ரந்தங்களாகி முடிந்திருக்கிறது. அப்படி முடிந்துபோன க்ரந்தங்களுக்கு இன்னமும் உயிரிருப்பதாகவைத்து "அந்த க்ரந்தத்திலே சொன்னோம்; அதிலே கண்டுகொள்வது" என்றெழுதுவது யுக்தமாகுமா? ஸமீபகாலத்தில் ஸ்ரீஸ்வாமியால் உபயுக்த

ஸங்க்ரஹம் என்றொரு சிறு நூல் தமிழில் வெளியிடப்பட்டுள்ளது. அதில் (33 ஆம் வார்த்தையில்) "இவ்விஷயத்தில் வக்தவ்யமெல்லாம் பூர்ணத்வவிசாரத்தில் விஸ்தாரமாகச் சொன்னோம், அங்கேகண்டு கொள்வது" என்றெழுதியுள்ளார். அந்த பூர்ணத்வவிசாரம் மிகச் சிறிது. அதில் விஸ்தாரமாக எதுவும் சொல்லப்பட்டிருக்கவில்லை. சொல்லப்பட்டவிஷயங்களும் அடியேனுடைய 'ப்ரஹ்ம வ்யாப்தி பரிஷ்க்ரியா' என்னும் விபுல க்ரந்தத்தினால் நிரஸ்தம். அதன்மீது ஒன்றுமெழுதாமலே அந்த சிறு நூல் இன்னமும் ஜீவித்திருப்பதாக வைத்து எழுதுவது உசிதமோ?

11. அன்றியும், அந்த உபயுக்த ஸங்க்ரஹத்திலேயே (51 ஆம் வார்த்தையில்) "இவ்விஷயத்தை ஸமஸ்யமாந ஸூக்த்யர்த்த நிஷ்கர்ஷத்தில் வெகு விஸ்தாரமாக ப்ரதிபாதித்தோம்; அங்கே கண்டு கொள்வது" என்று எழுதியுள்ளார். ஸமஸ்யமாந ஸூக்தி யென்பது வித்வத் கோஷ்டிகளில் மிகவும் உபஹாஸ்யமான ஒரு உக்தி. அதைப்பற்றி ஏழெட்டு வருஷ காலம் க்ரந்த சர்ச்சைகள் நடந்தன. ஸ்ரீஸ்வாமியின் சிஷ்யர்களும் ஆப்தர்களும் வசந க்ருத்யம், லிங்கஸாரஸ்யம் முதலான சில சுவடிகளை வெளியிட்டார்கள். கடைசியாக ஸமஸ்யமா நோக்தி ஸௌஷ்டவ விமர்சம் என்கிற க்ரந்தத்தை அடியேன் வெளியிட்டு எல்லா வாதங்களையும் நிரஸித்திருக்கிறேன். அது இருநூற்றுச் சொச்சம் சுலோகங்கள் கொண்டது. விரிவான தமிழுரையோடுங் கூட அதனை க்ரந்தாக்ஷரத்தில் அச்சிட்டு வெளியிட்டிருக்கிறேன். ஸதாசார்ய ஸூக்திரக்ஷா முதலான க்ரந்தங்களையும் அதற்கு முன்னே விபுலமாக வெளியிட்டிருக்கிறேன். அவற்றுக்கு ஸ்வாமியோ ஸ்வாமி சிஷ்யர்களோ யாரும் யாதொன்றும்விடை கூறினதில்லை. அடியேனுடைய க்ரந்தங்களை இவர்கள் அடியோடு அலக்ஷியம் செய்து ஒருபோதும் ஒருமறுப்பும் எழுதாமலே யிருந்திட்டால் அது ஒரு கௌரவமாக இருக்கும். அந்தனையும் எழுதிப்பார்த்து முடிவாக மறுமாற்றம் கூறகில்லாமல் ஓய்ந்திருக்கிறார்களென்பது ஸகல க்ரந்தங்களையும் கண்டவர்களுக்கு ஸ்பஷ்டமே. அப்படியிருக்க, நிரஸ்தங்களாய் முடிந்துபோன சுவடிகளை உதாஹரிப்பதும் அதிலே விரியவுரைத்தோமென்பதும் ப்ராமாணிக க்ருத்யமாகா தென்பதை ஸவிநயம் விஜ்ஞாபிக்கிறேன்.

12. உண்மையில் ஸமஸ்யமா நேத்யாதியான ஒரு உக்தியுண்டே, அதைவிட அஸமஞ்ஜஸமான வார்த்தை வேறு கிடையாது. அதில் காட்டப்படுகிற நியமம் சாஸ்த்ரஜ்ஞர்களால் சிரிக்கத்தக்கது, ஸமந்வயம் பண்ணிக் காட்டமுடியாதது. மஹாஜ்ஞாதாவான ஸ்ரீஸ்வாமி அதனை இன்னமும் திருவுள்ளத்தில் கொண்டிருப்பதானது விஸ்மயநீயங்களில் தலையானதே. உண்மையில அதில் சாரமிருந்தால் அந்த ஸமஸ்யமா நோக்திபின் ஸாதுத்வத்தைச் சிறிது விவரித்து வெளியிட்டருள வேணுமென்கிற ப்ரார்த்தனையோடே நிற்கிறேன்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம்
அண்ணங்கராசாரியர் விஜ்ஞாபித்த
**தத்த்வதீபிகா விமர்சம்**
முற்றிற்று.